# பாடம் புகட்டும் பழமொழிகள்



# பாடம் புகட்டும்

# பழமொழிகள்

தொகுதி
1

* சிறுவர் முதல் பெரியோர் வரை படித்துப் பயன் பெற வேண்டிய நூல்.

* பயன்தரும் பழமொழிகள் பல பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன.

ஆக்கம் :
இலக்கிய வித்தகர்,
கவிஞர் த. துரைசிங்கம் B.A (HONS), Dip. in. Ed, S.L E.A.S
கல்விப்பணிப்பாளர் (ஓய்வு)

உமா பதிப்பகம்,
521/1B, காலி வீதி,
கொழும்பு - 06

## நூல் விவரக் குறிப்பு

நூல் : பாடம் புகட்டும் பழமொழிகள்

ஆசிரியர் : கவிஞர் த. துரைசிங்கம்



முதற்பதிப்பு : டிசம்பர், 2004

வெளியிடுவோர் : உமா பதிப்பகம்
521/1B, காலி வீதி
கொழும்பு - 06

விற்பனையாளர் : லங்கா புத்தகசாலை
F.L.1-14, டயஸ் பிளேஸ்,
குணசிங்கபுர,
கொழும்பு - 12
தொலைபேசி : 2341942

ISBN 955 - 98551 - 8 - 2

## பதிப்புரை

நம் அன்னைத் தமிழ் மொழியில் ஆயிரமாயிரம் பழமொழிகள் உள்ளன. அவை அனைத்தும் நம்முன்னோர் அளித்த அருஞ்செல்வங்கள். அவற்றை மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் அவை கூறும் பொருள் ஒன்றாயிருக்கும். அவற்றை ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்போமாயின் அவை ஒவ்வொன்றும் அழுத்தமான, கனதியான பல்வேறு செய்திகளைக் கொண்டனவாக விளங்குவதைக் காணலாம். அவை கூறும் நீதிகள், வாழ்க்கை அனுபவங்கள் யாவும் மனித சமுதாயத்திற்கு நல்வழி காட்டவல்லன.

இந்நூலில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐம்பது பழமொழிகள் கற்றுத் தரும் பாடங்களை நூலாசிரியர் நன்கு விளக்கியுள்ளார். அவரது எளிய விளக்கங்கள் படிப்போருக்குப் பழமொழிகளின் உண்மைக் கருத்துக்களையும் அவற்றுக்கு இக்காலத்தோர் தரும் புதிய கருத்துக்களையும் அறிந்திடும் வாய்ப்பினை அளிக்கிறது.

**பாடம் புகட்டும் பழமொழிகள்** வரிசையில் இது முதல் நூலாகும். இவ்வகையில் தொடர்ந்தும் பல நூல்கள் வெளிவர வுள்ளன. பல்வேறு பயன்தரும் நூல்களைப் படைத்தளித்துள்ள முன்னாள் கல்விப் பணிப்பாளர், கவிஞர் த. துரைசிங்கம் இந்நூலை ஆக்கியளித்துள்ளார். அன்னாருக்கும் எம் இதயபூர்வமான நன்றி.

பாடம் புகட்டும் பழமொழிகளைப் படியுங்கள், சிந்தியுங்கள், பயன் பெறுங்கள். நன்றி

அன்புடன்
பதிப்பாளர்.

# பொருளடக்கம்

# பழமொழிகள்

பழமொழிகளைப் பற்றி நாம் எல்லோரும் அறிவோம். பழமொழி என்றால் என்ன? என்பதற்கு அந்தச் சொல்லிலேயே விளக்கம் இருப்பதை நாம் காணலாம். பழைய மொழி பழமொழி, பழகிப் போன மொழி, பழக்கத்தில் வந்துவிட்டமொழி பழமொழி எனக் கூறலாம். பழமொழிகள் ஆதிகாலத்திலிருந்தே வழக்கத்தில் உள்ளன. அவற்றுக்கு இலக்கணமோ, வரையறையோ கிடையாது. நம் முன்னோர் அனுபவரீதியாகப் பெற்ற அறிவைக் கொண்டே பழமொழிகளைக் கூறினர். அவை செந்தமிழிலன்றிக் கொச்சை மொழியிலும் அமைந்திருப்பதைக் காணலாம்.

முன்னோர்கள் தம் வாழ்க்கையில் அனுபவித்தவற்றைப் பின்னோர்கள் அறிந்து கொள்வதற்குப் பேருதவியாக இருப்பவை பழமொழிகள். பழ மொழிகளுக்கு 'எழுதா இலக்கியம்' என்ற பெயரும் உண்டு. முன்னோரின் வாழ்க்கை அனுபவங்களே பழமொழிகள். பழமொழிகள் என்பவை கற்பனை சிறிதும் கலவாத வாழ்க்கை நெறி; இலக்கிய வடிவங்கள்.

நீதியைக் கூறி வாழ்க்கையை நேர்மைப்படுத்தும் கருத்துக்களைக் கொண்ட பழமொழிகள் பலவுள. இந்த எளிமையான வாசகங்களைப் பயன்படுத்தாதோர் எவருமிலர் எனலாம். பழமையாகச் சொல்லப்பட்டதானாலும் காலத்தை வென்று வாழும் சிறப்புடையன பழமொழிகள். எல்லோராலும் என்றும் ஏற்கத்தக்கவையாக அவை திகழ்கின்றன.

உலகில் பல்வேறு இனங்கள், மதங்கள், கலாசாரங்கள் உள்ளன. ஒவ்வொரு மொழியிலும் நீதி போதிக்கும் பழமொழிகள் உள்ளன. பழமொழிகள் தோற்றத்தால் பழையது ஆனாலும், பயன் கருதிப் பார்க்கும் போது அவை புதியனதான். வாழ்க்கைக்குப் பயன்படும் யதார்த்தபூர்வமான உண்மைகளை அவை புகட்டுகின்றன.

இதன் காரணமாகவே அவை காலத்தை வென்று வாழும் சிறப்புக்குரியனவாகின்றன. எக்காலத்துக்கும் ஏற்கக்கூடிய உண்மைகளை அவை கூறுவதனாலேயே நிலைத்து நிற்கின்றன.

பழமொழிகள் பல சிறப்புக்குரிய அம்சங்களைக் கொண்டுள்ளன. சிந்திக்கத் தூண்டுகின்ற ஆழமான கருத்துக்களை குறுகலான வாக்கிய அமைப்பில் அவை கூறுகின்றன. நமது முன்னோர்கள் அனுபவசாலிகள். தாங்கள் கண்ட உண்மைகளை அழகிய சிறிய வாக்கியங்களில் வெளிப்படுத்தினார்கள். அவை அனைத்தும் பழமொழிகள் ஆகிவிடும் எனச் சொல்லி விட முடியாது. பொதுவான வாழ்க்கை உண்மைகளை அவை பிரதிபலிக்க வேண்டும். அவை காலம் காலமாகப் பெரும்பான்மை மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். அப்போதுதான் அவை நீடித்து நிலைத்து, வழக்கில் கையாளப்பட்டுப் பழமொழிகள் என்கின்ற அந்தஸ்தைப் பெறும்.

தமிழில் ஏராளமான பழமொழிகள் புழக்கத்தில் உள்ளன. படிப்பறிவற்றவர்கள் கூடத் தாம் பேசும் போது நீதி, நேர்மை, நியாயத்தை வலியுறுத்த இத்தகைய பழமொழிகளைப் பயன்படுத்துவதைக் காணலாம். பழமொழிகள் நம் வாழ்வோடும் பண்பாட்டுடனும் இரண்டறக் கலந்துள்ளன என்பதையே இது எடுத்துக் காட்டுகின்றது. பழமொழிகள் மூலம் அனுபவம் பேசுகிறது. வாழ்க்கைக்குத் தேவையான எத்தனையோ விடயங்களைப் பழமொழிகள் மூலம் நாம் புரிந்து கொள்ள முடியும். பழமொழிகள் வாழ்க்கைக்குப் பயன்தரும் பல உண்மைகளை வெளிப்படுத்துகின்றன. பழமொழிகளை மேலோட்டமாகப் பார்த்தால் அவை ஏதோ ஓர் அர்த்தம் தருவனவாகவே தோன்றும். ஆனால் சிந்திக்கச் சிந்திக்கப் பல்வேறு வாழ்க்கை உண்மைகளை அவை புலப்படுத்துவதனைக் காணலாம்.

பழமொழிகள் நாடோடிப் பாடல்கள் போன்று மக்கள் மனதைக் கவருந்தன்மையன. ஒரு விடயத்தை எடுத்துரைக்கும் போது பழமொழியைப் பயன்படுத்துகின்றனர். அப் பழமொழியானது ஆழ்ந்த





கருத்துடையதாக விளங்கும். இத்தகைய பழமொழிகள் மக்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டும் வன்மை மிக்கனவாக விளங்குகின்றன. பழமொழிகளை நாம் ஆழ்ந்து கற்றல் வேண்டும். வாழ்க்கையில் வெற்றிகாண இவற்றின் அறிவு நமக்குத் துணை புரியும். இதனாலேயே சிறுவர் முதல் பெரியோர் வரை பழமொழிகளை நன்கு அறிந்து கொள்ள விரும்புகின்றனர்.

சுருங்கக்கூறின் பழமொழிகள் யாவும் நமது முன்னோரின் அனுபவ வார்த்தைகள். அவை நமக்கு நல்வழி காட்ட வல்லன. வையத்து வாழ்வாங்கு வாழத் துணை புரிவன. பழமொழிகள் நமது முன்னோர் அளித்த செல்வங்கள். அவற்றைப் போற்றிப் படிப்பதுடன் பேணிக் காக்கவும் நாம் முற்பட வேண்டும்.

**பழமொழிகள் என்பது மண்ணின் மகிமையை, கலாசாரத்தின் பெருமையை, பண்பாட்டின் மேன்மையை, நாட்டு நடப்பின் தன்மையை, மனித வாழ்வின் இலக்கணத்தை உலகுக்கு உணர்த்தும் உயிரியல் தத்துவ சித்தாந்தச் செல்வமாகும.**

# பாடம் புகட்டும் பழமொழிகள்

பழமொழிகள் நீதியைக் கூறி வாழ்க்கையை நேர்மைப்படுத்தும் கருத்துக்களைக் கொண்டவை. இவற்றைப் பயன்படுத்தாதவர்கள் எவருமிலர் எனலாம். நமது நாளாந்த வாழ்க்கையில் பழமொழிகளைப் பயன்படுத்துவதை அறிவோம். எளிமையான வாசகங்களைக் கொண்ட பழமொழிகள் நமக்குப் பல பாடங்களைக் கற்றுத்தருகின்றன. நம்முன்னோர் நமக்களித்த அருஞ் செல்வமாக அவை மிளிர்கின்றன. அவற்றைப் பேணிப் பாதுகாப்பதும் அவற்றின் கருத்துணர்ந்து வாழ்வதும் நமது தலையாய கடமையாகும்.

உலகில் பல்வேறு மொழிகள், இனங்கள், மதங்கள், கலாசாரங்கள் உள்ளன. ஒவ்வொரு மொழியிலும் மக்களுக்கு நீதி போதிக்கும் பழமொழிகள் உள்ளன. ஆயினும் அவையனைத்தும் புகட்டும் கருத்துக்கள் பெரும்பாலும் ஒரே தன்மையுடையனவாகவே விளங்குகின்றன. நாடும் மொழியும் வேறுபட்டாலும் பழமொழி கற்பிக்கும் பாடம் ஒன்றாகத்தான் இருக்கும் என்பர். பழமொழி என்பது தோற்றத்தால் பழையது; ஆனாலும் பயன் கருதிப் பார்க்கும் போது புதியதுதான். சிந்திக்கத் தூண்டும் வகையில் குறுகிய வாக்கிய அமைப்பில் ஆழமான விடயங்களைப் பழமொழிகள் சொல்லுகின்றன. நமது முன்னோர் அனுபவசாலிகள். அவர்கள் தாங்கள் கண்ட யதார்த்த பூர்வமான உண்மைகளை நறுக்குத் தெறித்தாற்போல் வெளியிடும்போது அழகான சிறிய வாக்கிய அமைப்பில் அவை அமைந்து விடுகின்றன.

நமது அன்னைத் தமிழில் ஆயிரமாயிரம் பழமொழிகள் உள்ளன. அவை மக்களால் நாளாந்தம் பயன்படுத்தப்படுவதைக் கண்ணாரக் காண்கின்றோம். படிப்பறிவற்றவன் கூடத் தான் பேசும் போது நீதி, நேர்மை நியாயத்தை வலியுறுத்தப் பழமொழிகளைப் பயன்படுத்துவதைக் காணலாம். நமது வாழ்வோடும் பண்பாட்டோடும் பழமொழிகள் எப்படி இணைந்து கலந்துள்ளன என்பதையே இது எடுத்துக் காட்டுகிறது.





பழமொழிகள் வாழ்க்கை உண்மைகளைக் காலம் காலமாக மக்களுக்கு உணர்த்தி வருகின்றன. பழமொழிகள் அனைத்தும் இலக்கண சுத்தமாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. இதில் எண்ணங்களே பிரதானமாக அமைகின்றன. மொழியில் சிறந்த பாண்டித்தியம் இல்லாதவனும் அனுபவ வாயிலாக அருமையான உண்மைகளைச் சொல்லிவிட முடியும். எனவே கொச்சையான மொழியில் கூட அனுபவபூர்வமான, அபூர்வ உண்மைகளைக் கூறும்போது அவைகூடப் பழமொழிகளாகிவிடலாம்.

பழமொழிகளை எவரும் திட்டமிட்டுப் படைப்பதில்லை. நாடோடிப்பாடல்கள் மாதிரி இவையும் உணர்ச்சி வெளிப்பாடாக மக்கள் நாவினின்றும் தோன்றியவையாகும். பழமொழிகளுக்கு எவரும் இலக்கணம் வகுத்து வரையறையிட்டுச் சொல்ல முடியாது. அவற்றில் பொதிந்துள்ள கருத்துக்களும் சொல்லப்பட்டுள்ள முறையுமே அவற்றிற்கான இலக்கணமாகும். பழமொழிகளின் பயன்பாடு அளவிடற்கரியது. அவை நமது வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படுவன எனலாம். பழமொழிகளை வைத்து வாழ்க்கைக்குத் தேவையான எத்தனையோ விடயங்களை நாம் புரிந்து கொள்ள முடியும்.

வேறு எவற்றிலும் பார்க்கப் பழமொழிகளில் அனுபவம் பெரிதும் பேசப்படுகிறது. இதனால் அவை வாழ்க்கைக்கு அவசியம் தேவைப்படுவன என்று துணிந்து கூறலாம்.

எந்தப் பழமொழியையும் மேலெழுந்த வாரியாகப் பார்ப் போமானால் ஏதோ ஓர் அர்த்தம் தோன்றும். அந்த அர்த்தம் மட்டுமே அப்பழமொழியின் முழுமையான கருத்தாகிவிட முடியாது. மேன்மேலும் சிந்திக்கச் சிந்திக்கப் பல்வேறு உண்மைகள் அதிலிருந்து கிளைவிட்டுச் செல்வதைக் காண முடியும்.

சுருங்கக் கூறின் பழமொழி என்பது ஒரு விதை போன்றது. அதை நம் மனதில் ஆழமாக ஊன்றிச் சிந்தனை என்னும் நீரூற்றி வளர்ப்போமாயின் அது வாழ்க்கைக்குகந்த பயன் தரும் பல மலர்களையும் கனிகளையும் நல்கும். அத்தகு பெருமைமிக்க பழமொழிகளைப் பேணிப் பாதுகாப்பதும் படித்தின்புறுவதும் நமது தலையாய கடமையாகும்.

## 1 அகத்தின் அழகு முகத்தில் தெரியும்

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது முதுமொழி. பல்லாண்டு காலமாக நம் முன்னோர் பயன்படுத்திவரும் பழமொழி இது. இப் பழமொழியின் கருத்து மிக ஆழமானது. மனிதகுலத்துக்குப் பாடம் கற்றுத் தருவது.

முக அழகு என்பது ஒருவருடைய முக அமைப்பைப் பொறுத்த விடயம் மட்டுமல்ல. மூக்கு அழகாக, எடுப்பாக, கண்கள் கவர்ச்சியாக, உதடுகள் உணர்ச்சிகளை வெளிப்படுத்த, நெற்றி பிறை நிலாத் தோற்றம் கொள்ள இருந்து விட்டால் மட்டும் அந்த முகம் அழகாகி விடும் என்று கூறுவதற்கில்லை.

இயற்கையே முகத்தை உள்ளத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் கண்ணாடியாக ஆக்கி வைத்திருக்கிறது. உள்ளத்தில் நிழலாடும் உணர்வுகளை, கிளர்ச்சிகளைப் பிரதிபலித்துக் காட்டுவது முகமாகும். சிறு குழந்தைகளின் முகங்களை நாம் பார்ப்போமாயின் அவர்களது முகங்களில் அவர்களது அக அழகை நன்கு காணலாம். கள்ளங்கபடமற்ற அவர்களது உள அழகை அவர்களது முகம் நன்கு காட்டும். இத்தோற்றத்தை குழந்தைத்தனம் என்று கூறுவர். மாசுமறுவற்ற அவர்களது உள அழகே அவர்களது முகங்களில் பிரதிபலிக்கின்றது. ஆனால் வயது முதிர்ந்தோரின் முக அழகைக் குழந்தைகளின் முக அழகுடன் ஒப்பிட்டுக் கூறிவிட முடியாது. குழந்தைகள் வஞ்சகம் அற்றவர்கள். அவர்களது உள்ளம் பால் போல் தூய்மையானது.

'நாற்பது வயதுக்குப் பிறகு ஒருவன் தன்னுடைய முகம் எப்படி இருக்கிறது என்பதற்கு அவனே பொறுப்பாளி ஆகிறான்' என்கிறார் ஆபிரகாம்லிங்கன். ஒருவனது உள்ளத்து உணர்வுகளை அவனுடைய முகமே காட்டிவிடும் என்ற உண்மையை நாம் மறந்து விடக் கூடாது.





உள்ளம் தெளிவாக, உணர்ச்சிபூர்வமாக, எண்ணங்கள் தூய்மையாக இருக்கும் போது முகத்துக்கு ஒரு தனி அழகு - தேஜஸ் ஏற்பட்டு விடுகிறது. உலகம் போற்றும் பெரியார்களின், மகான்களின் முகங்களைப் பாருங்கள். அவை சாமுத்திரிகா இலட்சணப்படி அழகான முகத்தோற்றம் கொண்டவை என்று சொல்வதற்கு இல்லை. ஆயினும் அவர்களது முகப்பொலிவு அனைவரையும் அவர்கள்பால் ஈர்த்து விடுகிறது. அவர்களது அகத்தின் அழகு முகத்தில் பிரதிபலித்ததே இதற்குக் காரணமாகும்.

அடுத்து காட்டும் பளிங்குபோல் - நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

தன்னையடுத்த பொருளினையுடைய நிறத்தை தானே கொண்டு காட்டும் பளிங்கு போல ஒருவன் நெஞ்சத்து எழும் உணர்வுகளை அவன் முகம் தானே கொண்டு காட்டும் என்கிறார் வள்ளுவர். அவர் மேலும் கூறுகிறார்.

'முகத்தின் முதுக் குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்'

ஒருவனை உவந்தாலும் கோபித்தாலும் முகம் முற்பட்டு அவற்றை காட்டும். ஆதலால் முகம் போல் அறிவுமிக்கது, பிறிது எதுவும் இல்லை என்பது இதன் கருத்தாகும். எனவே அகத்தின் அழகை முகமே பிரதிபலிக்கும் என்ற உண்மையினை இதன் மூலம் நாம் உணர்ந்து கொள்ளலாம்.

ஒப்பனையால் ஒருவர் அழகாகி விடமுடியாது. உள்ளத் தூய்மையால் மட்டுமே மற்றவர்கள் நேசிக்கின்ற - விரும்புகின்ற அழகைப் பெற முடியும். இதைத்தான் அகத்தினழகு முகத்தில் தெரியும் என்னும் முதுமொழி நமக்குணர்த்துகிறது.

## 2 சிறுதுளி பெரு வெள்ளம்

வெள்ளம் பெருகியதாக இருக்கலாம். ஆனால் அது திடீரென உருவாகியதல்ல. பல இலட்சக்கணக்கான சிறுதுளிகள் ஒன்றாகச் சேரும் போதுதான் அது வெள்ளமாகப் பெருக்கெடுக்கின்றது. மழை பெய்யும் போது வானத்திலிருந்து விழும் நீர் சிறுசிறு துளிகளாகவே காணப்படுகிறது. அந்தத் துளிகள் விரைவில் நீர்த் தாரையாகிப் பூமியில் ஒன்று சேர்ந்து வெள்ளமாகப் பெருக்கெடுக்கின்றன. பல்லாயிரக் கணக்கான சிறு துளிகள் சேரும் போதே வெள்ளம் உருவாகிறது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

'சிறுதுளி பெருவெள்ளம்' என்னும் பழமொழி நமக்கு எதை உணர்த்துகிறது? சிறுசிறு முயற்சிகள் பெரிய சாதனைகளுக்குக் காரணமாகின்றன என்ற உண்மையினையே இப் பழமொழி நமக்கு உணர்த்துகிறது. சிறுதுளிகள் பெருவெள்ளமாக மாறுவது போலச் சிறுகச் சிறுகச் சேமித்து வந்தால் அது நாளடைவில் பெரும் செல்வமாகும் என்ற உண்மையினையும் இப் பழமொழி நமக்குப் புலப்படுத்துகிறது.

வாழ்க்கை பணத்தை மையமாகக் கொண்டே சுழல்கிறது. நமது அன்றாட வாழ்வில் இதனைக் கண்கூடாகக் காண்கின்றோம். அதனால்தான் 'பணம் இல்லாதவன் பிணம்' என்கின்றார்கள். பணத்தின் அருமை கருதியே 'பணம் பத்தும் செய்யும்', 'பணம் பாதாளம் வரை பாயும்' என்றார்கள்.

இன்றைய உலகில் செலவு இல்லாத மனிதரே இல்லை எனலாம். பணம் சேர்ப்பதே செலவு செய்யத்தான். வாழ்வில் பல்வேறு செலவுகள் வரும். இவற்றிற்கெல்லாம் பணம் அவசியமாகின்றது. அன்றாடச் செலவுகளுக்கு அதிக பணம் தேவையில்லாதிருக்கலாம். ஆனால் மருத்துவம் போன்ற அவசியச் செலவு அதிகமாகவும் ஆகலாம். இது திட்டமிட்ட செலவல்ல. திடீர்ச் செலவு. எனவே இது போன்ற திடீர்ச் செலவுக்கு எப்போதும் பணம் கையில் இருக்க





வேண்டும். சேமிப்பு இருந்தாற்றான் இது சாத்தியமாகும். திடீர்ச்செலவுகளுக்கு மட்டுமன்றி வீடுகட்டுதல், திருமணம் போன்ற எதிர்காலச் செலவினங்களைச் சமாளிக்கவும் எதிர்கொள்ளவும் சேமிப்பு அவசியமாகின்றது. நாம் சிறுகச் சிறுகச் சேமித்தாற்றான் இது சாத்தியமாகும்.

மலையில் இருந்து ஊற்றெடுத்து வரும் ஆற்று நீரை அணைகட்டித் தேக்காமல் விட்டால் - அவற்றின் போக்கில் விட்டு விட்டால் நீர் மண்ணுக்கும் மரத்துக்கும் பயன்படாமல் வீணாகும். அதுபோலத்தான் பணத்தைச் சேமிக்காமல் வர வரச் செலவிட்டால் அதுவும் பயன்தராது வீணாகி விடும். வெள்ளத்தைத் தடுக்க அணை கட்டியிருந்தால் நீரைத் தேக்கித் தேவைக்கேற்ப அதனைப் பயன்படுத்தலாம். தேவை அறிந்து திறந்து விடலாம். அதேபோல் பணத்தை நாம் சேமித்து வைத்திருந்தால் தேவைக்கேற்பப் பயன்படுத்திக் கொள்ள முடியும். நீரைத் தேக்க அணை அமைக்கத் திட்டமிடல் அவசியம். அதேபோல் பணம் சேர்க்கத் திட்டமிடல் அவசியமாகின்றது. திட்டமிட்டுச் சேர்த்தால் வாழ்வு வளமுறும்.

சேமிப்பின் பயன்கள் எண்ணற்றவை. சேமிப்பு இருக்குமானால் திடீர்ச்செலவுகளை எதிர்கொண்டு தீர்க்க முடியும். பணம் இருந்தால் பயம் இல்லை. வாழ்க்கையை மகிழ்ச்சிகரமாக நடத்துவதற்கு பணமே அடிப்படையாக அமைந்துள்ளது. சிறுகச் சிறுகப் பணத்தைச் சேர்த்துக் கொள்வதன் மூலமே வாழ்க்கையில் எதிர் கொள்ளும் செலவினங் களைச் சமாளிக்க முடியும். சேமிப்பதற்கு இன்று பல வழிகள் உள்ளன. வங்கிகளில் சேமிப்புக் கணக்குகளை ஆரம்பிப்பதற்கு வழியுண்டு. பாடசாலைகளிற் கூட வங்கி நிறுவனங்கள் மாணவர்கள் சேமிப்புக் கணக்குகளை ஆரம்பிப்பதற்கு ஊக்கமளிக்கின்றன. வங்கியில் நிலையான வைப்பு நிதியாகப் பெரும் பணம் போட்டுச் சேமிப்பைச் செம்மைப்படுத்தலாம்.

நாம் நாளாந்த செலவுகளைக் குறைக்க வேண்டும். இதன் மூலம் பணத்தைச் சேமிக்கப் பழக வேண்டும். சிந்தித்துச் செலவு செய்வோமாயின் செலவினைச் சுருக்கிக் கொள்ள முடியும். சிறுகச்

சிறுகச் சேர்க்கும் தேனீக்களைப் போல நாமும் சிறுகச் சிறுகப் பணத்தைச் சேமிக்கப் பழக வேண்டும். இதனால் நமது வாழ்வு வளம் பெறும். சிறிய எறும்புகளைப் பாருங்கள். அவை மழைக்காலத் தேவைக்கான உணவு வகைகளை வெயிற் காலத்திலேயே சேகரித்து விடுகின்றன. அவையும் நமக்குப் பாடம் கற்பிக்கின்றன. எதிர்காலச் சிந்தனையோடு எல்லோரும் சேமிக்க முற்பட்டால் நாமும் நலம் பெறுவது திண்ணம்.

சிறுதுளி பெரு வெள்ளம் என்னும் இப் பழமொழி புகட்டும் பாடம் இதுதான். நம் வாழ்வு வளம் பெற இப் பழமொழி கற்றுத் தரும் பாடத்தை நன்கு கடைப்பிடிப்போமாக

**பழமொழிகள் காலத்தின் கண்ணாடி, அவை தோன்றிய காலத்து மாந்தரின் வாழ்க்கைமுறை, சமுதாய எண்ணங்கள், பொருளாதார உண்மைகள் முதலியவை பழமொழிகளில் தெளிவாக எதிரொலிக்கின்றன. அக்கால மக்களின் நம்பிக்கைகள் ஆழமான பற்றுக்கள், அவர்களின் உளவியல் நிலை முதலியனவும் அவற்றில் ஒளிந்து கொண்டிருக்கின்றன.**





## 3 பழுத்த ஓலையைப்பார்த்துக் குருத்தோலை சிரித்ததாம்

'பழுத்த ஓலையைப் பார்த்து குருத்தோலை சிரித்ததாம்'. பழுத்த பனை ஓலையொன்று பனை மரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. காற்றடித்தால் வீழ்ந்து விடும். அதனுடைய பரிதாப நிலையைப் பார்த்துக் குருத்து ஓலை சிரித்தது. அந்தச் சிரிப்பின் அர்த்தம் என்ன? 'நீ கிழடு தட்டிப்போய் இன்றைக்கோ நாளைக்கோ என்று இருக்கின்றாய். என்னை ஒரு கணம் திரும்பிப்பார். எவ்வளவு இளமையோடும் பொலிவோடும் இருக்கின்றேன்' என்று நையாண்டி பண்ணுவது அச்சிரிப்பில் இருந்தது.

இப்பொழுது பழுத்துத் தொங்கும் ஓலையும் ஒரு காலத்தில் குருத்தோலையாகத்தான் இருந்தது. இப்போது குருத்தோலையாக இருக்கும் தானும் ஒரு காலத்தில் பழுத்த ஓலையாகி விழ வேண்டியிருக்கும் என்பதை அது மறந்துவிட்டது.

மூப்பு என்பது வாழ்க்கையில் தவிர்க்க முடியாத ஒன்று. என்றோ ஒருநாள் அனைத்து உயிர்க்கும் அது வந்தே தீரும். முதுமையும் தள்ளாமையும் என்றோ ஒருநாள் நமக்கும் வந்தே தீரும். இந்த உண்மை சாதாரணமானதுதான். ஆனால் ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டது. இதனை நன்கு சிந்தித்தால் இளமையின் அகம்பாவம் நம்மைவிட்டு நீங்கிவிடும்.

இந்தப் பழமொழியில் மற்றோர் கருத்தும் மறைந்து கிடக்கின்றது. முதுமைக்கும் அதைத் தொடர்ந்து வரும் மரணத்துக்கும் மனிதன் தயாராகி விட்டால் எத்தனையோ விடயங்களில் அவனுக்கிருந்த குழப்பங்கள் நீங்கிவிடும். அன்றைக்கு உள்ள சூழ்நிலைகளுக்கேற்ப வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் வசதி கிட்டும்.

மூத்தவர்களுக்கு மரியாதை செலுத்தும் எண்ணம் எழும். தன்னைவிடத் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களை, பலவீன மானவர்களை அலட்சியப்படுத்தும் எண்ணம் தோன்றாது.

'பழுத்த ஓலையைப் பார்த்துக் குருத்தோலை சிரித்ததாம்" என்ற பழமொழி மிகப் பெரிய வாழ்க்கை உண்மையை நமக்குப் புலப்படுத்துகிறது. வாழ்க்கை உண்மைத் தன்மையைச் சிந்திக்கத் தூண்டுகிறது. நிலையாமையையும் முதுமை நிச்சயம் வந்தே தீரும் என்பதையும் இப் 'பழமொழி நமக்கு நன்கு புலப்படுத்துகின்றது. எனவே எதுவும் நிலையானது என்று எண்ணாமல் சூழ் நிலைகளின் தன்மைக் கேற்ப வாழ்வை அமைத்துக் கொள்ளுதல் அவசியமாகும.

**பழமொழிகள் நமக்கு வழிகாட்டிகளாக அமைகின்றன. செல்ல வேண்டிய நெறியை அவை அறிவித்து உதவுகின்றன. எச்சரிக்கைக் குறிப்புகளாகவும் சில சமயம் அவை அமைகின்றன. தவறு செய்யும் மனதைத் திருத்துகின்ற நன் மருந்தாகவும் அவை தொண்டு புரிகின்றன. சில பழமொழிகள் அன்புத்தாயின் நல்லுரை போல அறிவுரை கூறுகின்றன.**





## 4 அழுத பிள்ளை பால் குடிக்கும்

நம் அன்றாட வாழ்க்கையில் கேள்விப்படும் பழமொழிகளுள் இதுவும் ஒன்று. இதன் பொருள் நன்கு தெளிவானது. பச்சிளம் குழந்தைக்கு எதற்கு எடுத்தாலும் அழத்தான் தெரியும். குழந்தைப் பருவத்தில் அழுகைதான் அதன் பேசும் மொழி. குழந்தை அழுதால் அது எதற்கு அழுகிறது என்று தெரிந்து கொண்டு தாய் பால் கொடுத்து அதன் பசியை ஆற்றிவிடுவாள். பிள்ளையின் தேவையை நன்குணர்ந்த தாயின் செயல் இதுதான்.

இப் பழமொழியை மேலோட்டமாகப் பார்த்தால் இதன் பொருள் சாதாரணமாகத் தெரியும். ஆனால் நன்கு சிந்தித்துப் பார்ப்போமாயின் இப் பழமொழியில் ஆழமான கருத்துக்களும் உண்டென்பதைப் புரிந்து கொள்ளலாம். பால் கொடுப்பது பெற்ற தாயின் கடமை. அவள் குழந்தைக்குப் பசி எடுக்கும் போதெல்லாம் பால் கொடுக்க வேண்டும் என்பதை நன்கறிவாள். அத்தாயின் அன்புக்கு ஈடு இணையில்லை "பால் நினைந்தூட்டும் தாயினும்............" என்று இறைவனின் பேரன்பைப் பாடும் மாணிக்கவாசகர் தாயன்பை முதலில் நினைவூட்டுகின்றார். தாயின் அன்புக்கு நிகரில்லை என்பதை இதன் மூலம் நாம் உணர்ந்து கொள்ளலாம்.

தாயானவளுக்குக் குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டும் என்று எவரும் நினைவூட்ட வேண்டிய அவசியமே இல்லை. ஆனால், சில வேளைகளில் அலுவல்களின் நிமித்தம் அல்லது வேறு பிரச்சினைகள் காரணமாகப் பால் ஊட்ட வேண்டும் என்பதை அவள் மறந்திடவும் கூடும்.

அதற்காகக் குழந்தை பால் குடிக்காமல் இருந்துவிட முடியுமா? அதற்கும் பசிக்கும்தானே. பசிக்கிறது என்பதை குழந்தை வாய்விட்டுக் கூறும் பருவத்தில் இல்லை. எனவே அது தனக்குத் தெரிந்த மொழியில் அழுகையின் மூலம் தனது தேவையை நினைவூட்டுகிறது. தாயின் கவனத்தைத் தன்பால் ஈர்க்கிறது. உடனே

அதன் தேவையை உணர்ந்து ஓடோடிச் சென்று பால்கொடுக்கின்றாள் தாய்; அதன் பசியைப் போக்குகின்றாள்.

குழந்தை அழாமல் இருந்தால் அதன் பசிதீருமா? இல்லை. அழுகையின் மூலமே அது தன் தேவையை நிறைவேற்றிக் கொள்கிறது. அதுபோன்று ஒரு பொருளைப் பெறவேண்டியிருந்தால் நாம் முயற்சிக்காமல் சும்மா இருந்தால் அது கிடைக்காது. அதனைக் கேட்டுத்தான் பெறவேண்டும். அதை விடுத்து "எனது தேவையை உணர்ந்து கொள்ளக் கூடாதா? நான் கேட்டா பெறவேண்டும்?" என்று வாளா இருந்தால் அந்தப் பொருள் எப்படிக்கிடைக்கும்? "கேளுங்கள் கொடுக்கப்படும்; தட்டுங்கள் திறக்கப்படும்" என்னும் இயேசு பெருமானின் திருவசனங்களும் இதனையே நமக்கு உணர்த்துகின்றன.

இந்தப் பழமொழி நமக்குப் புகட்டும் பாடம்தான் என்ன? அழுதபிள்ளைக்குத் தாய் பால் கொடுப்பாள் என்று இப் பழமொழி கூறவில்லை. அழுத பிள்ளை பால் குடிக்கும என்றுதான் கூறுகிறது. பிள்ளைக்குப் பால் தேவை என்றால் அது இயற்கையாகக் கிடைக்காத பட்சத்தில் அழுதாவது அதனைப்பெறவேண்டும் எனப் பிள்ளை நினைக்கிறது. அதற்காக முயற்சிக்கிறது. இதேபோன்றுதான் நமது நியாயமான உரிமைகள் கிடைக்காத பட்சத்தில் அவற்றை நாம் கேட்டுப் பெறவேண்டும் என்ற உண்மையை இப் பழமொழி நமக்குப் புலப்படுத்துகின்றது. நமக்குரிய உரிமைகள் பல இருக்கலாம். அவற்றை எவரும் இலகுவில் நமக்கு வழங்கி விடுவதில்லை. உரிமைகளை வழங்க வேண்டியவர்களுக்குப் பலமுறை நினைவூட்ட வேண்டியிருக்கின்றது. சில வேளைகளில் நமக்கு உரிய உரிமைகளை வழக்காடியோ அல்லது போராடியோ பெறவேண்டியிருக்கிறது.

இந்த மகத்தான உண்மையை இப் பழமொழி எளிதாகவும் அழகாகவும் நமக்கு உணர்த்துகிறது.





## 5 அடம்பன் கொடியும் திரண்டால் மிடுக்கு

அடம்பன் கொடி என்பது கொடிவகையைச் சேர்ந்தது. மிகவும் மிருதுவான கொடிப்பூண்டு இது. இதனை எவரும் எளிதில் அறுத்து விடலாம். இந்தக் கொடிகள் பல சேர்ந்து ஒன்றிணைந்திருந்தால் அவற்றை அறுப்பது மிகவும் சிரமம். எளிதில் அறுக்க முடியாது. காரணம் கொடிகள் பலவும் இணைந்திருத்தலேயாகும்.

இப் பழமொழி நமக்குப் புலப்படுத்தும் உண்மை என்ன? கொடிகள் பல சேர்ந்திருப்பதால் அவற்றை எளிதில் அறுக்கமுடியாதிருப்பது போல மனிதரும் பலர் சேர்ந்து ஒற்றுமையாக இருப்பார்களாயின் அவர்களைப் பிறர் எளிதில் வென்றுவிடமுடியாது. ஒரு தனிமனிதனை மற்றொரு தனிமனிதன் இலகுவில் வென்றுவிடலாம். அவனே பல பேர்களுடன் ஒற்றுமையாகச் சேர்ந்து நின்றால் அவனை வெற்றி கொள்ளல் எளிதல்ல.

அடம்பன் கொடியும் திரண்டால் மிடுக்கு என்னும் பழமொழி நமக்கு மற்றோர் உண்மையையும் புலப்படுத்துகிறது. "ஒன்று பட்டால் உண்டு வாழ்வு" என்னும் வாக்கும் இதனையே நமக்கு உணர்த்துகின்றது. எந்தத்துறையை எடுத்துக் கொண்டாலும் ஒற்றுமையாக உழைப்போரே அத்துறையில் சித்திபெறுவர். இன்றைய உலகில் ஒருவன் தனித்து வாழ முடியாது. அவன் பலருடன் கூடி வாழவேண்டியவனாக இருக்கிறான். ஒருவன் தனித்து ஒரு தொழிலைச் செய்வது சிரமம். பலருடன் கூடிச் செய்யும் போது எளிதாகவும் இலாபகரமாகவும் அதனைச் செய்திட முடியும். இதன் மூலம் அதிக நன்மையும் விளையும். **"ஒற்றுமையே பலம்"** என்ற உண்மையை வலியுறுத்தும் இப் பழமொழி நாம் வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய கைக்கொள்ள வேண்டிய நல்ல பண்பினையே எடுத்துக் காட்டுகிறது. இப் பழமொழியின் உள்ளார்ந்த கருத்தினை உணர்ந்து செயற்படின் நம் வாழ்வு நலம் பெறும் என்பது திண்ணம்.

சிந்திக்கத் தூண்டுகின்ற வகையில் குறுகலான வாக்கிய அமைப்பில் ஆழமான விடயங்களைச் சொல்லுவதே பழமொழி.

## 6 அரசனை நம்பிப் புருசனைக் கைவிடாதே

இப் பழமொழி ஒரு சுவையான செய்தி ஒன்றைக் கூறுகிறது. அவள் நல்ல அழகி. அரசனின் பார்வை அவள் மீது பட்டது. அரசன் பின் சென்றாள். அவன் அரண் மனையைச் சேர்ந்த பின்னரே அவளுக்கு நல்லறிவு பிறந்ததாம். உடனே தன் புருஷனிடமே திரும்பிவிட்டாள். அவன் அவளைச் சேர்ப்பானா? இப்பொழுது அவளுக்கு அரசனும். இல்லை. புருஷனும் இல்லை.

இப் பழமொழிக்குப் பழையகாலத்திற் கூறப்பட்ட கருத்து இதுதான். ஆனால், தற்போது இப் பழமொழிக்குப் புதிய கருத்துக் கூறப்படுகின்றது. ஒரு பெண் தனக்கு குழந்தை வரம் வேண்டி தன் கணவனிடம் நாட்டம் கொள்ளாது, யாரோ ஒரு சோதிடர் சொன்ன வாக்குப்படி அரசினை (அரசமரத்தினை)த் தினந்தினம் சுற்றி வந்து வணங்கினாளாம். அரசினை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதை இதுதான் என்கின்றார்கள் இக்காலத்தவர்கள். அரச மரத்தைச் சுற்றி அடிவயிற்றைத் தடவின மாதிரி என்ற மற்றோர் பழமொழியும் இதனையே வலியுறுத்துகிறது. கருத்து எதுவாக அமைந்தாலும் இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைக் கற்பிக்கிறது.

சிலர் அதிக பணம் சம்பாதிப்பதற்காகத் தாங்கள் ஈடுபட்டுள்ள வேலையை விட்டுவிட்டு, வேறு வேலையை நாடிப்போனார்கள். போனபின் அங்குள்ள சிரமங்களைக் கண்டு வெறுப்புற்றுப் பழைய வேலைக்கே திரும்பினார்கள். அதற்குள் அவர்கள் முன்னர் பார்த்த வேலையும் போய் விட்டது. அதை வேறு சிலர் செய்து கொண்டிருந்தார்கள் அதன் காரணமாக அங்கும் இல்லை, இங்கும் இல்லை என்ற பரிதாப நிலைக்குள்ளானார்கள். வேலையில்லாமல் திண்டாடினர். இந்தப் பாரிதாபகரமான நிலையையே இப் பழமொழி நமக்கு உணர்த்துகிறது. ஒரு வேலையில் உள்ளோர் அதனைவிட்டு நீங்க முற்படும் போது அதன் விளைவுகள் குறித்து முற்கூட்டியே நன்கு ஆலோசித்த பின்னரே முடிவு எடுக்க வேண்டும். அவசர புத்தியில் உள்ளதை விட்டுவிட்டு பின் வேலை எதுவும் இன்றி அவதியுறக் கூடாது. இந்த உண்மையை நமக்கு எச்சரிக்கை யாக இப் பழமொழி சுட்டிக்காட்டுகின்றது.





## 7 அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்

ஒருவனது மனம் அச்சத்தில் ஆழ்ந்துள்ளது. எதைப் பார்த்தாலும் அவனுக்குப் பேய்போலத் தோற்ற மளிக்கும். எந்த இருட்டைக் கண்டாலும் அவனுக்குப் பேயின் நினைப்பு வந்து விடுகின்றது. உண்மையில் அங்கு பேயோ பிசாசோ இல்லை. ஆனால் பயத்தின் காரணமாக அவன் மனம் பேயைப்பற்றிக் கற்பனை செய்து கொள்கிறது. இது ஒரு மனோதத்துவம் சார்ந்த பழமொழியாக விளங்குகின்றது. மனத்தில் வேரூன்றிவிட்ட பயம் மற்றவற்றைப் பார்க்கும் போது அவனிடம் பிரதிபலிக்கின்றது. இதனையே அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்னும் பழமொழி நமக்குப் புலப்படுத்துகின்றது.

பயம் நமது மனத்தை விட்டு நீங்கினால் வீண் பிரமைகள் ஏற்படாது. ஒரு செயலில் நாம் ஈடுபடும் போது பயம் கொள்ளல் ஆகாது. அப்படிப் பயம் கொண்டால் மனதில் இல்லாத சந்தேகங்கள் தலையெடுக்கும். அச்செயல் நல்லமுறையில் முற்றுப்பெறாது. எதிர்ப்படும் நிகழ்வுகள் எல்லாம் தடையாக இருக்குமோ என்று அஞ்சநேரிடும். இப்படி அஞ்சிக்கொண்டிருந்தால் காரியம் சாத்தியப்படுமா? சாத்தியப்படாது. எனவேதான் மனத்தில் அச்சத்திற்கு இடமளிக்கக் கூடாது.

இருட்டில் ஒருவன் நடந்து செல்கின்றான் .பாம்பு, பூச்சி ஏதும் கடித்துவிடுமோ என்று பயப்படுகிறான். திடீரென அவன் காலில் ஒரு கயிறு தட்டுப்படுகிறது. உடனே பாம்பை மிதித்து விட்டோமோ எனப் பயந்து துள்ளிப்பாய்கிறான். சிறிய முள் குத்தினாலும் பாம்பு கடித்திருக்குமோ? என்று பயம் கொள்கிறான். இதெல்லாம் அவனது மனப்பிரமை காரணமாகவே ஏற்படுகின்றன.

இப் பழமொழி மூலம் நாம் ஒரு உண்மையைப் புரிந்து கொள்ள முடிகிறது. பயம்தான் பேய்களை உருவாக்குகின்றது.

மனதில் உள்ள அச்சம் காரணமாகவே பேய் என்று ஒன்று உண்டென நினைக்கிறோம். வீண் மயக்கங்களை அச்சமே தோற்றுவிக்கிறது. மனதில் அச்சமின்றேல் நாம் எதற்கும் அஞ்சவேண்டியதில்லை.

"பயமெனும் பேய்தனை யடித்தோம் - பொய்மைப்
பாம்பைப் பிளந்துயிரைக் குடித்தோம்.........." என்ற கவியரசர் பாரதியின் கூற்று இதற்குச் சான்றாகும். எனவே அச்சம் தவிர்த்து ஆண்மையுடன் வாழப் பழகிக் கொள்வதே நம் கடமையாகும்.

**பழமொழிகள் முன்னோர்களின் பட்டறிவைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவர்களின் சொல்லாற்றலைச் சுட்டிக் காட்டுகின்றன. அவர்கள் பெற்ற அனுபவத்தை நாமும் பெறும் போது, அப் பழமொழிகள் தாமாக நம் மனத் திரையில் தோன்றுகின்றன. நம்மை வியப்பில் ஆழ்த்தி விடுகின்றன.**





## 8 அப்பன் அருமை மாண்டால் தெரியும், உப்பின் அருமை இல்லாவிட்டால் தெரியும்

குடும்பத்தின் தலைவனாக விளங்குபவன் தந்தை. குடும்ப நிருவாகத்தைப் பேணிக் காப்பவனும் அவனே. தந்தையின் கடமை மகத்தானது. தன் பிள்ளைகளுக்கு எவ்வித கஷ்டத்தையும் ஏற்படுத்தாமல், அவர்களுக்குக் கல்வியூட்டி, ஊண், உடையளித்துப் பாதுகாத்துவருபவன் தந்தை. அவனது ஆதரவிலேயே பிள்ளைகள் எவ்வித கவலையுமின்றிக் களிப்புடன் வாழ்கிறார்கள். தந்தையின் அன்பும், ஆதரவும் உள்ளவரை அவர்களுக்குக் குறைவேதுமில்லை.

சில வேளைகளில் பிள்ளைகள் தம் விருப்பப்படி நடக்க முற்படும் போது அப்பன் அதைத் தடுத்தலும் உண்டு. தங்கள் எதிர்கால நன்மைகளுக்காகவே அப்பா தடுக்கிறார் என்பதை அவர்கள் அவ்வேளையில் உணர்வதும் இல்லை. பின்னர் அவர்கள் உணரும் போது உண்மை விளங்கும். தந்தை உள்ளவரை எவ்வித கவலையுமின்றி அவனது உழைப்பில் வாழும் பிள்ளைகள் தந்தை இறந்த பின் தம் வாழ்க்கையைத் தாமே கொண்டு நடத்த வேண்டிய நிலைக்குள்ளாகிறார்கள். குடும்பப் பொறுப்பு அவர்கள் தலையில் பொறுக்கிறது. அப்பொழுது ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைப் போக்கிக் கொள்ள முடியாமல் திண்டாட நேரிடும். அப்பொழுதுதான் அவர்கள் தந்தை இருக்கும் பொழுது தாம் இருந்த நிலையை எண்ணிப்பார்ப்பார்கள். தந்தையின் அருமையை அனுபவபூர்வமாக உணர்வார்கள்.

உப்பு சிறியதோர் பொருள். அது உணவைச் சுவையூட்டப் பயன்படுகின்றது. உப்பில்லாப் பண்டம் குப்பையிலே என்பார்கள். உப்பு இல்லாத போதுதான் அதன் அருமை தெரியும். அனைத்து உணவுப் பொருளுக்கும் நல்ல சுவையை அளிப்பது உப்புத்தான். இது இலகுவாகக் கிடைக்கக் கூடியப் பொருள் எனினும் உரிய வேளையில் அது இல்லையெனில் எவ்வளவு சிறப்பாக உணவாக்கிய போதிலும் அதன் சுவை பூரணமாக அமையாது. உப்பில்லாமல்

உண்ணும் போதுதான் அந்த உப்பின் மேன்மை தெரியும். இந்த உண்மையை உணர்த்தும் பொருட்டே நம் முன்னோர் இப் பழமொழியை உபயோகித்தனர்.

அப்பன் இல்லாவிட்டாற்றான் அப்பன் பெருமை தெரியும் உப்பு இல்லாத போதுதான் உப்பின் அருமை தெரியும் என்பதை இப் பழமொழி நமக்குச் சுட்டிக் காட்டுகிறது. இதே வேளையில் இப் பழமொழி நமக்கு மற்றோர் உண்மையையும் புலப்படுத்துகிறது. சாதாரணமாகக் கிடைக்கக் கூடிய உப்பு இல்லாதவிடத்து அதன் அருமை பெரிதாகப் பேசப்படுகின்றது. அப்படியாயின் ஈடுசெய்ய முடியாத அப்பனின் இழப்பு குடும்பத்துக்கு எவ்வளவு பெரியதாக்கத்தை ஏற்படுத்தும் என்பதை இப் பழமொழி குறிப்பால் நமக்கு உணர்த்துகிறது எனலாம்.

**மக்களின் உணர்ச்சியை வெளிப்படுத்தும் கருவியாகப் பழமொழிகள் விளங்குவதால் அவை இலக்கிய மாகின்றன. எதுகையும் மோனையும் இடம் பெற்றிருப்பதால் கவிதையாகவும் அவை இலங்கு கின்றன. மக்களின் பண்பாட்டை அறிவிப்பதால் அவை சமுதாய இலக்கியமாகின்றன. நீதிகளைக் கூறுவதால் அறமுறை இலக்கியமாகின்றன. மக்களின் பேச்சு வழக்குகளை மேற் கொண்டிருப்பதால், மொழியின் ஆய்வுக்கும் அவை உதவி செய்கின்றன.**





## 9 அன்பான சிநேகிதனை ஆபத்திலே அறி

நமக்கு அநேகர் நண்பர்களாக இருக்கலாம். ஆனால், அவர்கள் அனைவரும் உண்மையான நண்பர்களென நாம் உறுதியாகக் கூறமுடியாது. சிலர் நம்மிடமுள்ள பொருளைக் கவரும் பொருட்டு, அல்லது செல்வத்தைக் கரைப்பதற்காகவே சிநேகம் கொள்வர். நமது செல்வம் தீர்ந்து விட்டதும். மெல்ல நம்மை விட்டுப் பிரிந்து விடுவர். சிலர் நம்மைக் கொண்டு தமக்கேதும் கருமம் ஆகவேண்டுமாயின் நட்புக்கொள்வார்கள். தங்கள் காரியம் கை கூடியதும் மெல்ல மெல்ல நம்மை விட்டு அகன்று விடுவர். இப்படிப்பட்டவர்களை எல்லாம் சிநேகிதர் என்று கூறமுடியுமா?இல்லை. இத்தகையோரைப் பற்றி ஔவையார் பின்வரும் பாடலில் அழகாகக் குறிப்பிடுகின்றார்.

"அற்ற குளத்தில் அறுநீர்ப்பறவை போல்
உற்றழித் தீர்வார் உறவல்லர் - அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறவார் உறவு"

அப்படியாயின் உண்மையான சிநேகிதன் யார்? வள்ளுவர் இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டினைக் குறிப்பிடுகின்றார்.

"உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு"

உண்மையான சிநேகிதன் உனக்குத் துன்பம், ஆபத்து ஏற்பட்ட போதும் உன்னைப் பிரியாமல் உதவியாக உன்னோடிருந்து உதவி செய்பவனாக விளங்குவான். வாழ்விலும் தாழ்விலும் இன்பத்திலும் துன்பத்திலும் உன்னோடு சேர்ந்திருப்பான். அத்தகையோனே உண்மையான சிநேகிதன். ஆவான். இந்த உண்மையை நன்குணர்ந்து கொண்டே நீ நண்பர்களுடன் பழக வேண்டும் என்பதை இப் பழமொழி வலியுறுத்துகிறது.

"உண்மையான நண்பனை ஆபத்தில் அறி" என்று கூறப்படுவதும் இதனையே நமக்கு உணர்த்துகிறது. "அன்பான சிநேகிதனை ஆபத்திலே அறி" என்னும் இப் பழமொழி அனைவருக்கும் புத்தி புகட்டுவதாக அமைந்துள்ளது. நமக்கு ஓர் ஆபத்து, துன்பம் ஏற்படும் போதுதான் உண்மையான சிநேகிதர்களை நாம் யதார்த்தப் பூர்வமாகத் தெரிந்து கொளள்லாம்.

**பழமொழிகள் இலக்கண சுத்தமாக அமைய வேண்டுமென்கிற கட்டாயமில்லை. எண்ணங்களே பிரதான இடம் பெறுகின்றன. மொழியில் நல்ல புலமை - பாண்டித்தியம் இல்லாதவனும் அனுபவவாயிலாக அருமையான உண்மைகளைச் சொல்லிவிட முடியும். உண்மை என்பதே அழகின் வடிவம்தான். ஆகவே கொச்சையான மொழியில் அபூர்வமான உண்மைகள் சொல்லப்படும் போது அவை கூடப் பழமொழி ஆகிவிட முடியும்.**





## 10 ஆல் பழுத்தால் அங்கே அரசு பழுத்தால் இங்கே

மரங்களின் பயன்பாடுகளில் ஒன்று அவைதரும் பழங்களாகும். பழம் தரும் மரங்களையே அனைவரும் விரும்புவர். எம்மரத்தில் பழங்கள் நிறைந்திருக்கின்றனவோ அம்மரத்தில் உள்ள பழங்கள் யாவற்றையும் உண்டு முடித்த பின் அப்பறவைகள் அம்மரத்தை விட்டு வேறு பழமுள்ள மரத்தை நாடிச் செல்கின்றன. இது அனுபவபூர்வமாக நாம் காணும் காட்சியாகும். ஆலமரம் பழுத்தால் அதனை நாடிச் சென்ற பறவைகள் பின்னர் அரசமரம் பழுத்ததும் அதனை நாடிச் செல்கின்றனவாம். இதுவே இப் பழமொழி கூறும் கருத்தாகும்.

இது போன்று ஒருவன் மிக்க வசதிவாய்ப்புடன், செல்வத்துடன் இருக்கும் போது உறவினர்களும் பிறரும் அவனிடம் வலியச் சென்று உறவாடுவர். அவனது பெருமைகளைப் பேசி பல நன்மைகளைத் தாம் பெறுவர். அவனிடம் செல்வம் குன்றி அவன் வறுமையடைந்து விட்டாலோ அவனைக் கைவிட்டு வேறு செல்வந்தரை நாடிச் செல்வர். இந்த உலக வழக்கையே 'ஆல் பழுத்தால் அங்கே அரசு பழுத்தால் இங்கே' என்னும் பழமொழி நமக்கு நன்குணர்த்துகிறது.

இப் பழமொழியின் கருத்தினை இக்காலத்தில் நிகழும் சில சம்பவங்கள் மூலமும் நாம் நிதர்சனமாக உணர்ந்து கொள்ள முடிகிறது. அரசியல் கட்சி ஒன்றின் அபேட்சகராகப் போட்டியிடும் ஒருவர் தேர்தலில் வென்றதும், தனது வருமானத்தைப் பெருக்கும் நோக்குடன் கட்சித்தலைவரைத் 'தாஜா' பண்ணி அமைச்சர் பதவியை பெற்று விடுகிறார். மறு தேர்தலில் அந்த ஆட்சி கவிழ்ந்ததும். ஆட்சியமைக்கும் மற்றொரு கட்சிக்குத்தாவி விடுகின்றார். தமக்கு உதவி புரிந்த மக்களையோ, கட்சியையோ அவர் எண்ணிப் பார்ப்பதில்லை. எங்கே வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள முடியுமோ அங்கே சென்று சேரத் தவறுவதில்லை. இந்த அபேட்சகரின் நிலையையும் இந்தப் பழமொழி நன்கு விளக்குகிறது. பதவியை நாடிச் செல்லும் அரசியல் வாதிகளுக்கும் பழத்தினை நாடிச் செல்லும் பறவைகளுக்கும் உள்ள பொருத்தப்பாட்டினை இப் பழமொழி மூலம் நாம் உணர்ந்து கொள்ளலாம்.

## 11 ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்

இப் பழமொழியை நாம் பன் முறையும் கேட்டிருக்கிறோம். உலக வழக்கில் பேசப்படும் இப் பழமொழியைக் கேட்டால் அதன் அர்த்தம் தவறான கருத்தையே தருகின்றது என்பதைப் பலரும் உணர்வதில்லை.

இப் பழமொழியை மோலோட்டமாகப் பார்த்தால் ஏகப்பட்ட நோயாளிகளைத் தவறான மருந்துகளின் மூலம் கொன்று விட்டு அதிலிருந்து பெறும் அனுபவத்தின் மூலமாகவே ஒருவன் வைத்தியன் என்கின்ற தகுதியை, அந்தஸ்தை அடைகிறான் என்று தோன்றுகிறது. இப் பழமொழியின் கருத்து தவறாகவே அர்த்தம் கொள்ளப்படுகின்றது. எந்த ஒரு நோயாளியையும். சுகவீனத்துக்கு உள்ளாக்குபவன் வைத்தியனாக இருக்க முடியாது. அது அவனது தொழிலுக்கே இழுக்காகும். எனவே இப் பழமொழியில் இடம்பெற்றுள்ள கருத்துத் தவறை நாம் நன்கு விளங்கிக் கொள்ள வேண்டும்.

உண்மையில் இப் பழமொழி '**ஆயிரம் வேரைக் கொன்றவன் அரைவைத்தியன்**' என்றே அமைந்திருத்தல் வேண்டும். சித்த ஆயுர்வேத வைத்தியர்கள் பல வகையான மூலிகைகளைப் பறித்து வந்து அவற்றைப் பதப்படுத்துவார்கள். மூலிகைகளை உலர வைப்பார்கள். சிலவற்றைப் பிழிந்து சாறு எடுப்பார்கள். இவ்விதம் மூலிகைகளைப் பதப்படுத்தும் போதும், பயன்படுத்தும் போதும், மூலிகைகளிலிருக்கும் கழிவுப் பொருட்களை அகற்றுவார்கள். இவ்விதம் மூலிகைகளைப் பதப்படுத்துதலை 'மாரணம்' செய்தல் என்று கூறுவர். மாரணம் என்ற சொல்லுக்கு வடமொழியில் (சமஸ்கிருதத்தில்) 'கொல்லுதல்' என்றும் பொருள் கூறுவர். இப்படி வேரை மாரணம் செய்து - கொன்று மருந்து தயாரிப்பவன் வைத்தியன். எனவே தான் ஆயிரம் வேரைக் கொன்றவன் அரைவைத்தியன் என்று பழமொழியாகக் கூறினர். 'ஆயிரம் வேரைக் கொன்றவன்' என்பதுதான் பழக்கத்தில் ஆயிரம் பேரைக் கொன்றவன் எனத் திரிபடைந்து விட்டது.





வைத்தியன் என்ற தகுதியைப் பெறுபவன், ஆயிரக்கணக்கான வேர்களைப் பதப்படுத்தி (கொன்று - மாரணம் செய்து) மருந்து தயாரித்து அனுபவம் மிக்கவனாக இருத்தல் வேண்டும் என்ற கருத்தையே இப் பழமொழி நமக்குப் புலப்படுத்துகின்றது. இதுவே இதன் உண்மையான கருத்துமாகும்.

**பழமொழிகளில் அனுபவம் பேசுவதால் வேறு எதையும் விட அவை வாழ்க்கைக்கு அதிகமாகப் பயன்படக்கூடியவை எனக் கருதப்படுகின்றன. பழமொழிகளை வைத்து வாழ்க்கைக்குத் தேவையான எத்தனையோ விடயங்களை நாம் புரிந்து கொள்ள முடியும்.**

## 12 ஆடு நனைகிறதென்று ஓநாய் அழுததாம்

ஓநாய்க்கும் ஆட்டுக்கும் ஒரு போதும் ஒத்து வராது. எப்போதும் ஆட்டைப் பிடித்து உண்பதே அதன் பழக்கமாகும். இந்நிலையில் ஆடு மழை நீரில் நனைகிறதே என்று ஓநாய் அழுமாயின் அது ஆட்டின் மீது கொண்ட இரக்கத்தினால் அல்ல என்பது இலகுவில் புலனாகும். அது வெறும் பாசாங்கு என்பதை அனைவருமே அறிவர்.

இத்தகைய பாசாங்கு கொண்ட மனிதர் பலரை நாம் அனுபவ பூர்வமாக அறிந்து கொள்ளலாம். ஒருவனைக் கெடுத்து நன்மை பெற விரும்புவோர் சிலர் அவனிடத்து அனுதாபம் கொண்டவர்கள் போல நடித்துக் கருணை காட்ட முற்படுவர். அவனுக்குக் கேடு வராமற் பாதுகாப்பது போல நடிப்பர். பிறரிடத்திலிருந்து அவனைப் பாதுகாப்பவர் போல் நடித்து அவனைக் கெடுத்து ஒழிக்க வழி தேடுவர். அத்தகையோரின் போலி அனுதாபமும் நடிப்பும் உண்மையில் அவனைக் கெடுத்து ஒழிக்க வேண்டும் என்னும் சதி நோக்குடனேயே இருக்கும். இந்த உண்மையைப் புலப்படுத்தும் வகையிலேயே இப் பழமொழி அமைந்துள்ளது.

இப் பழமொழி நமக்கு நல்லதோர் விழிப்புணர்வை நல்கும் வகையிலும் அமைந்துள்ளது. சிலர் நம்மீது அனுதாபம் காட்டு கிறார்கள், அன்பாகப் பழகுகிறார்கள் என்பதை நம்பி நாம் அவர்கள் கூறும்படி நடக்க முற்படுவோம். ஆனால், அவர்கள் என்ன நோக்கத்துடன் அனுதாபம் காட்டுகிறார்கள் என்பதை நாம் சரிவர உணராவிட்டால் நம்மை ஆபத்திலும் சிக்கவைத்து விடலாம். எனவே எப்போதும் நாம் விழிப்புடன் இருக்க வேண்டும்.

"எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும்
அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்னும்

வள்ளுவர் வாக்கும் இதனையே நமக்கு உணர்த்துகிறது. ஆடு நனைகிறதைக் கண்டு ஓநாய் அதன் மீது இரக்கப்பட்டு அழவில்லை. தனக்குக் கிடைத்துள்ள இந்த நல்ல இரை அநியாயமாக மழையில்





நனைந்து கெட்டுப் போகப் போகிறதே என்ற கவலையிலேயே அது அழுவது போற் பாசாங்கு செய்தது என்றே இதற்குப் பொருள் கொள்ளலாம்.

எனவே போலியாக பாசாங்கு செய்பவர்களை, கருணை காட்டுபவர்களை நாம் ஒரு போதுமே நம்பக் கூடாது என்ற எச்சரிக்கையையும் இப் பழமொழி நமக்குப் புலப்படுத்துகிறது.

**தமிழ் நாட்டுப் பழமொழிகள் தன்னிகரற்ற மெய்யறிவுக் களஞ்சியம். உலகத்தவர்க்கு மாபெரும் அறிவுப் புதையல். பண்டைத் தமிழரின் பண்பாட்டை, பழமை சான்ற வழக்காறுகளை இம் மண்ணின் மைந்தர்களின் ஏனைய பழக்க வழக்கங்களை தெளிவாகக் காட்டும் பலகணிகளாக விளங்குகின்றன.**

**பழமொழிகள் படிக்குந்தோறும் புதுப்புதுப் பொருள்தரும்; தமிழ் மக்கள் வாழ்வில் வலிவும் பொலிவும் தந்தது; தமிழர் வாழ்க்கைக்குப் பழமொழிகள் அரும் பெரும் மருந்துகள் எனப் பெரியோர்கள் போற்றிப் புகழ்ந்துள்ளனர். அவற்றை அழியவிடாது போற்றிக் காப்பதே நம்பணியாகும்.**

## 13 ஆடத்தெரியாதவள் கூடம் கோணல் என்றாளாம்

சிலர் தங்கள் திறமையின்மையை ஒப்புக் கொள்ளமாட்டார்கள். தங்களுடைய குறைகளை ஒப்புக் கொள்ளாது அதற்கு வேறு காரணங்களைக் கூறுவர். தங்கள் குறைபாட்டுக்கு மற்றவர் மீது பழி சுமத்துவர். எதற்கும் ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூறுவார்கள். இதன் மூலம் தங்கள் தகுதியின்மையை குறைபாட்டை மறைத்துக் கொள்ள முற்படுவர். நமது நாளாந்த வாழ்க்கையில் சமூகத்தில் இத்தகையோர் பலரை நாம் கண்ணாரக் கண்டு கொள்ளலாம்.

அவள் ஒரு நடனமாது. அரங்கத்தில் ஏறி ஆடப்போகிறாள். அவளுடைய மனதில் பயம் தொட்டு விட்டது. தன்னுடைய ஆட்டத்தில் பிறர் குறைகண்டு கொண்டால் என்ன செய்வது என்று சிந்திக்கிறாள். தனது குறையை நன்குணர்ந்து திருத்திக் கொள்ள முற்படாது அரங்கம் சரியில்லை, ஆகவே என்னாலும் சரிவர ஆடமுடியவில்லை என்று சொன்னால் அதைப் போற் கேலிக்குரிய செயல் வேறு எதுவுமில்லை.

"ஆடத் தெரியாதவள் கூடம் கோணல் என்றாளாம்" என்னும் பழமொழியின் கருத்து இதுதான். இப் பழமொழியை மேலோட்டமாக நோக்குவதை விடுத்துச் சற்று ஆழமாக நோக்குவோமாயின் இதில் ஆழ்ந்த பொருள் உண்டென்பதை உணர்ந்து கொள்ளலாம். இப் பழமொழி தன் குறையை உணராமல் பிறரைக் குறை சொல்பவர்களைப் பற்றி நன்கு சிந்திக்குமாறு நம்மைத் தூண்டுகிறது. ஆடத்தெரியாதவள் தன் குறையை அரங்கத்தின் மீது ஏற்றிச் சொல்லுவாள் என்று கூறுவதோடு மட்டும் நின்று விடுகிறது. மேற்கொண்டு அவளது கூற்றுத் தொடர்பான விளக்கங்கள் எதையுமே சொல்லவில்லை. பழமொழியைப் படிக்கிறவர்கள், கேட்கின்றவர்கள் தத்தம் யூகத்துக்கு ஏற்பப் புரிந்து கொள்வார்கள் என்று விட்டு விடுகிறது.





இப் பழமொழியை நன்கு படித்துப் பாருங்கள். ஆடத் தெரியாதவள் கூடத்தை மட்டும் குறை சொல்கிறாள் என எடுத்துக் கொள்வதோடு மட்டும் நாம் நின்றுவிடக் கூடாது. கூடத்தைக் குறை சொல்பவளையும் குறை சொல்கிறது இப் பழமொழி. இதன் மூலம் இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடம் புகட்டுகிறது.

தன்னுடைய குற்றங்குறைகளை உணராமல் சூழ்நிலை களையோ, மற்றவர்களையோ குறைசொல்லிக் கொண்டிருப்பது கூடாது என்ற நல்ல பண்பை நமக்கு உணர்த்துகிறது. எவர்மீது குறை சொல்லலாம் என்று தேடிக் கொண்டிருப்பதை விடுத்து நமது குறைகளை உணர்ந்து நாமே திருத்திக் கொள்ள வேண்டும். பிறர் மீது பழிசுமத்துவதை விடுத்து நம்மை நாமே திருத்திக் கொள்ள வேண்டும் என்ற நல்ல பண்பை இப்பழமொழி நமக்குப் புலப்படுத்துகிறது.

நம்மை நாமே திருத்திக் கொண்டால்
உலகம் திருந்தும் என்பதை நாம் மறக்கக்கூடாது.

**பழையன கழிதலிலும் புதியன புகுதலிலும் பழமொழிகள் விதி விலக்கைப் பெறுகின்றன. வளர்ந்த இலக்கியங்களுக்கும் வளரும் புதிய இலக்கியங்களுக்கும் வழித்துணையாக, வாழையடி வாழையாக, ஓர் இன்றியமையா உறுப்பாகப் பழமொழிகள் இணைந்திருக்கின்றன.**

## 14 ஆழம் தெரியாமல் காலை விடாதே

இது அனைவருக்கும் முன் எச்சரிக்கையாக அமைந்த பழமொழி. கிணற்றிலோ, ஆற்றிலோ, குளத்திலோ இறங்கும் போது அதன் ஆழத்தைத் தெரிந்து கொண்டு இறங்க வேண்டும். அவற்றின் ஆழம் தெரியாமல் இறங்கினால் ஆபத்துக்குள்ளாகி நீரில் மூழ்கி இறக்க நேரிடும் என்று எச்சரிக்கிறது இப் பழமொழி. பழமொழியின் கருத்து வாசிக்கும் போதே தெளிவாகப் புலப்படுகிறது. ஆழத்தைத தெரிந்து கொள்ளாமல் காலைக் கூட விட்டுவிடாதே என்று நம்மைப் பார்த்து எச்சரிக்கிறது இப் பழமொழி.

இப் பழமொழியின் உண்மைப் பொருள் மிகமிக வலுவானது. அது உணர்த்தும் உண்மை தான் என்ன?

ஒரு செயலைச் செய்யுமுன் அதன் விளைவுகளைப் பற்றி முதலில் நன்கு சிந்திக்க வேண்டும். "எண்ணித் துணிக கருமம்." என்றார் வள்ளுவர். ஒரு காரியத்தை அதன் பரிமாணத்தை நன்கு விளங்கிக் கொண்ட பின்னரே அக்காரியத்தைச் செய்ய முற்பட வேண்டும். அக்காரியத்தைச் செய்யக் கூடிய ஆற்றல், தகுதி நமக்கு உண்டா என்பதையும் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். இந்த இரண்டு விடயங்களையும் நன்கு நிர்ணயித்துக் கொண்ட பின்னரே செயலில் இறங்கு என்று இப் பழமொழி நமக்குப் பாடம் கற்பிக்கிறது.

சில வேளைகளில் நமது தகுதிக்கும் திறமைக்கும் அப்பாற்பட்ட செயல்களில் நாம் ஈடுபட்டு விடுகிறோம். செயலில் ஈடுபட்ட பின்னர் விடயம் புரியாமல் விவரம் தெரியாமல் காரியத்தை ஒப்பேற்ற முடியாமல் இடைநடுவில் நின்று அவதியுறுகிறோம். அப்படிப்பட்ட தர்மசங்கடமான நிலையில் சிக்கிக் கொள்கிறோம். அதைப் போன்றே விளைவுகளைப் பற்றிச் சிறிதும் சிந்திக்காமல் செயலில் ஈடுபட்ட பின்னரே அதன் தாக்கங்களைப் பாதிப்புக்களை உணர்கிறோம். தவறைத் திருத்திக் கொள்ள முடியாமலும் எடுத்த கருமத்தை நிறைவு செய்யமுடியாமலும் திண்டாடுகிறோம்.





இதெல்லாம் நமது அவசர புத்தியையே காட்டுகிறது. ஆழம் தெரியாமல் காலை விடும் போது ஏற்படும் விளைவுகளையே காட்டுகின்றன. எனவே தான் "ஆழம் தெரியாமல் காலை விடாதே" என்று இப் பழமொழி நம்மை எச்சரிக்கிறது. வீதிக்கடவைகளில் காணப்படும் சிவப்பு விளக்குகளைப் போன்று இப் பழமொழியும் "ஆபத்து, நெருங்காதே" என்னும் பாவனையில் நம்மை எச்சரிக்கை செய்கிறது. "ஆழம் தெரியாது காலை விட்டோர்" பலர் அவலமுற்ற சம்பவங்கள் பல உள்ளன. எனவே தான் இப்பழமொழி ஆழம் தெரியாமல் காலை விடாதே என்று நமக்கு எச்சரிக்கை செய்வதன் மூலம் பண்பான வாழ்க்கைக்குப் பாதை காட்டுகிறது எனலாம்.

**பழமொழி அனுபவத்தின் சாரம். அதன் நீளம் குறைவு; ஆழம் அதிகம். பழமொழியைத் தொல்காப்பியர் "முதுமொழி" எனக் கூறிச் சிறப்பித்துள்ளார். புகழ் பெற்ற இலங்கியங்கள், இதிகாசங்களில் பழமொழிகள் ஊடுருவிப் பொலிவதைக் கண்கூடாகக் காணலாம். பழைய, புதிய படைப்புக்களில் சுவைதரும் கூட்டுப் பொருளாக நாட்டுப் பழமொழி பயன்படுகிறது. பழமொழிகளைக் கையாளாத கவிஞர்களோ, மேதைகளோ, அறிஞர்களோ இல்லையென உறுதியாகக் கூறலாம்.**

## 15 மண்குதிரையை நம்பி ஆற்றில் இறங்கலாமா?

இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைக் கற்பிக்கிறது. தகைமையற்றோரைத் தக்கார் என நம்பி எக்காரியத்திலும் ஈடுபடக்கூடாது என்ற உண்மையை நமக்குப் புகட்டுகிறது.

அதுவோ மண்குதிரை. மண்ணினால் செய்யப்பட்டது. தண்ணீரில் இறங்கினால் அது கரைந்து அழிந்து விடும். அத்தகைய மண்குதிரையை நம்பி ஒருவன் ஆற்றைக் கடக்க முற்பட்டால் அவன் கதி என்னவாகும்? பாதி வழியிலேயே பரலோகம் அடைய வேண்டியது தான்.

இந்த உவமை மூலம் நமக்கு நல்லதோர் பாடத்தை இப் பழமொழி தருகிறது. ஒரு கருமத்தைச் சாதிக்கக் கூடிய ஆற்றல் உடையோரை, தகுதி படைத்தோரை நம்பியே அக்கருமத்தில் நாம் ஈடுபட வேண்டும். அங்ஙனம் ஈடுபடாவிட்டால் துன்பமே விளையும். மண்குதிரையை நம்பியதால் ஏற்பட்ட விளைவே ஏற்படும்.

இக்காலத்தில் இப் பழமொழிக்குப் புதிய ஓர் விளக்கம் கூறப்படுகிறது. ஆற்றுநீரில் மண் குதிர் குதிராக இருப்பதைக் காணலாம். அந்தக் குதிரை மேடு என்று நம்பிக் காலை வைத்தோமானால் அது கரைந்து விடும். அதனைக் குறிப்பிடும் வகையிலேயே 'மண்குதிரை நம்பி ஆற்றில் இறங்காதே' என்கிறார்கள்.

எவ்விதம் கருத்துக் கொண்டாலும் தகைமையற்றோரை நம்பிக் கருமம் ஆற்ற முற்படாதே என்ற நல்ல கருத்தையே இப் பழமொழி சுட்டி நிற்கின்றது எனலாம். நமது வாழ்க்கைப் பயணத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய விடயங்களைப் பழமொழிகள் பல சுட்டிக் காட்டுகின்றன. அத்தகைய பழமொழிகளுள் இதுவும் ஒன்றாகும்.





## 16 கள்ளனை நம்பினாலும் குள்ளனை நம்பக் கூடாது

இப் பழமொழியை மேலோட்டமாகப் பார்த்தால் திருடர்களைக் கூட நம்பிவிடலாம். ஆனால் குள்ளர்களை - உருவத்தில் குட்டையாக (கட்டையாக) இருப்பவர்களை நம்பக் கூடாது என்ற பொருளைத் தருவதாகவே கொள்ளலாம். இப் பழமொழிக்கு இன்று இருவிதமான கருத்துக்களை நாம் அறியமுடிகிறது.

அறக் கட்டையனை - குள்ளனை ஒரு போதும் நம்பக் கூடாது என்று உலக வழக்கில் கூறப்படுவதை நாம் கேட்டிருக்கிறோம். இதனையே இப் பழமொழியும் கூறுகிறது என்று கூறுவர் ஒருசாரார்.

மற்றொருசாரார் ஆன்மீக நோக்கில் இதற்கு வேறு பொருள் உண்டென்பர். உலகெலாம் காத்து நிற்கும் கிருஷ்ண பரமாத்மா குழந்தையாக இருந்த போது ஆயர் பாடியில் வெண்ணெய் திருடி உண்டவர். கோபியர்களின் சேலைகளைத் திருடிச் சென்று மறைத்து வைத்தவர். திருட்டுக்கள் புரிவதில் வல்லவர். அவர் குள்ளனாக வந்த போது நடத்திய திருவிளையாடல் மிகப் பெரியது.

மகாபலிச் சக்கரவர்த்தியின் செருக்கினை அடக்கிட அவர் செய்த திருவிளையாடல் அது. மாயக்கண்ணன் குள்ளனாக (வாமனனாக) வந்து தன் சிறிய சீரடிகளைக் காட்டி மூன்று அடி மண்கேட்டுப் பெற்றுக் கொண்டதும் திரிவிக்கிரமனாக மாறி, ஓர் அடியில் கீழ் ஏழு உலகத்தையும் மறு அடியில் வானத்தில் உள்ள ஏழு உலகத்தையும் அளந்து மூன்றாவது அடியில் மகாபலியின் தலையிலே அழுத்திப் பாதாள உலகத்துக்கே தள்ளிவிட்டார்.

சிறு காலடி தானே என்று நம்பி வரமளித்த மகாபலியைக் குள்ளனாக வந்த கண்ணன் ஏமாற்றி விட்டான். என்வே தான் கள்ளனாகிய கண்ணனை நம்பினாலும் குள்ளனாகிய வாமனனை நம்பக் கூடாது என்று இதற்குப் பொருள் கொள்ளலாம் என்கிறார்கள் ஆன்மீக வாதிகள்.

## 17 அவசரக் காரனுக்குப் புத்திமட்டு

தொன்று தொட்டு வழங்கிவரும் பழமொழிகளுள் இதுவும் ஒன்று. அவசரம் இருக்கும் இடத்தில் அறிவு வெளிப்படாது. அறிவு வெளிப்படும் இடத்தில் அவசரம் தலைகாட்டாது என்பர். அவசரம் தலை காட்டினால் அங்கே அறிவு தலைகுனிந்து விடும். இன்று அதிகமானவர்கள் அவசரக்காரர்களாகவே விளங்குகிறார்கள். எதெற்கெடுத்தாலும் அவசரம். இன்றைய உலகை அவசரயுகம் என்றே கூறிவிடலாம். அவசரக்காரர்களே எங்கும் காணப்படுகின்றார்கள். இவர்கள் அவசரத்தில் தங்கள் புத்தியைத் தக்கவகையில் பயன்படுத்திக் கொள்ள முற்படுவதில்லை. இதனாற்றான் ‘அவசரக்காரனுக்கு புத்திமட்டு‘ என்று பழமொழி கூறுகின்றது.

இப் பழமொழியின் பொருளை இருவகையில் நோக்கலாம். முதலாவது நடைமுறைப் பொருள், மற்றையது இலக்கியப்பொருள். நடைமுறைப் பொருளில் விரைவு, பரபரப்பு, பதற்றம் முதலியவற்றின் காரணமாக ஏற்படும் அவசரத்தில் புத்தி மட்டடைவதைக் காணலாம். இங்கு பரபரப்பு, நிதானமின்மை, பதற்றம் என்பனவே முக்கிய இடம் பெறுகின்றன. இவற்றின் காரணமாகவே அவசரக்காரனுக்குப் புத்திமட்டு என்னும் பழமொழி உருவானது எனப்படுகிறது. அவசரம் என்னும் சொல்லுக்கு இலக்கியப் பொருள் கொள்வோர் பின்வருமாறு கூறுவர்.

“அவசரம் என்பதில் உள்ள ‘சரம்‘ என்னும் சொல்லுக்கு மூச்சு என்றும் இயக்கம் என்றும் பொருள் கூறுவர். அவ்விரு பொருளையும் மூச்சின் இயக்கம் என்று இணைத்துரைக்கலாம். ஒழுங்குமுறையற்று தாறுமாறாக விரைந்தோடித் திரிகின்ற மூச்சின் இயக்கத்தையே அவசரம் என்றுரைக்கலாம். மனத்தின் ஒரு கூறு புத்தி. மனதின் பரபரப்பு, பதற்றம் என்பன புத்தியின் ஆற்றலைக் குறைத்துவிடுகின்றன. புத்தியின் ஆற்றல் குறைவினால் செயலாற்றலும் குறைந்து விடுகிறது.”





‘பதறாத காரியம் சிதறாது‘ என்னும் பழமொழியும் ‘அவசரக்காரனுக்கு புத்தி மட்டு’ என்பதையே மற்றொரு விதத்தில் சுட்டிக்காட்டுகிறது. நமது மனம் பரபரப்பாக உள்ளபோதும் சினமுறும்போதும் நமது மூச்சு பரபரப்பாகவே நம்மிடமிருந்து வெளிப்படுகிறது. மனம் கலங்குகிறோம். மனம் அமைதியுறும் போது நமது மூச்சும் அடங்கி அமைகிறது. ‘அவசரக்காரனுக்குப் புத்தி மட்டு’ என்னும் பழமொழி அவசர போக்கினால் புத்தியின் ஆற்றல் மிகவும் குறைந்து விடுவதையே உணர்த்துகிறது. எனவே மன அமைதியுடன் செயலில் ஈடுபடும் போது புத்தி குன்றாது என்பர்.

**அன்னைத் தமிழில் ஆயிரமாயிரம் பழமொழிகள் பரவிக்கிடக்கின்றன. மனிதனுக்கு மட்டுமல்ல, மாட்டுக்குக்கூட பழமொழிகள் உண்டு. மரம், செடி, கொடிகளுக்குக் கூடப் பழமொழிகள் ஏராளம் உண்டு.**

**அவை சொல் புதிது, பொருள் புதிது, சுவை புதிது என்பதோடு எளிமையும்மிக்கன. ஆசிரியரின்றிக் கற்றுக் கொள்ளும் பாங்குடையது.**

## 18 அந்தகனுக்கு அரசனும் ஒன்று ஆண்டியும் ஒன்று

கண்பார்வையற்றவன் அந்தகன். அவனுக்கு இருளும் ஒளியும் ஒன்று தான். அவற்றின் வேறுபாட்டை அவனறியான். குருடர்களைப் பொறுத்த வரையில் ஆட்களைத் தரம் பிரித்துப் பார்க்கும் பார்வை இல்லை. பார்வையிருந்தாற்றான் ஒருவரைப் பார்த்ததும் அவரது தகுதி நோக்கி மரியாதை காண்பிக்க முடியும்.

குருடனுக்கு இருளே வடிவமாதலால் அரசனும் ஆண்டியும் இருள் வடிவமாகவே தோன்றுவார்கள். இது சாதாரணமாகக் கூறப்படும் பொருள். இதன்படி அரசனாயிருந்தால் என்ன ஆண்டியாய் இருந்தாலென்ன அவர்களுக்கிடையே பேதம் காணும் ஆற்றல் அவனிடத்து இல்லை என்பது புலனாகும்.

இப் பழமொழிக்கு இக்காலத்தில் வேறு ஒரு பொருளும் கூறுகின்றனர். அந்தகன் என்றால் எமன் என்று பொருள். அவன் உயிர்களைப் பற்றிச் செல்வதையே தொழிலாகக் கொண்டவன். உயிரைப் பறித்துச் செல்ல வரும் எமன் இது அரசனது உயிர், இது ஆண்டியினது உயிர் என்று பேதம் காண்பதில்லை. அவனுக்கு அரசனும் ஒன்று தான் ; ஆண்டியும் ஒன்று தான். இதனையே அந்தகனுக்கு அரசனும் ஒன்று, ஆண்டியும் ஒன்று தான் என்ற பழமொழி நன்கு புலப்படுத்துகிறது. எமன் எவரிடத்தும் பேதம் காண்பதில்லை. தன் பணியையே மேற்கொள்பவன் என்பதையே இது சுட்டிக் காட்டுகிறது.

**கற்காலமானாலும் - தற்காலமானாலும் பழமொழிக்கு எப்போதும் "பொற்காலமே"**





## 19 தைபிறந்தால் வழி பிறக்கும்

தைபிறந்தால் வழிபிறக்கும் என்பது தமிழர்தம் நம்பிக்கை. இந்த நம்பிக்கையே பழமொழியாக உருவெடுத்துள்ளது. தைமாதம் பிறந்து விட்டால் எல்லாப் பிரச்சினைகளுக்கும் வழிபிறக்கும். மழைக்காலம் நீங்கி மகிழ்வளிக்கும் காலம் தைமாதம். சூரியன் உத்தராயணத்தில் பிரவேசிக்கும் நாள் தைமுதல் நாள். அதனையே தைப்பொங்கலாக, உழவர் திருநாளாகத் தமிழர்கள் கொண்டாடுகிறார்கள். தைபிறந்து விட்டால் குறிப்பாகத் திருமணங்கள் நடந்தேறும் என்பார்கள். சுப காரியங்கள் நிகழ்வதற்குப் பொருத்தமான காலம் தைமாதமாகக் கருதப்படுகிறது.

வயிலில் நெல் பயிரிட்டுப் பாடுபடும் விவசாயி அதன் விளைவை மகிழ்வுடன் கொண்டாடும் காலம் தை மாதமேயாகும். முற்றிய நெற்கதிர் அறுத்து புத்தரிசி கொண்டு பொங்கலிட்டுச் சூரியனுக்குப் படைத்து நன்றி செலுத்தும் நாளாகவும் தை முதல் நாள் கருதப்படுகிறது. இதனாலேயே தை நாளை மக்கள் பெரிதும் போற்றிக் கொண்டாடுகின்றனர்.

தை பிறந்தால் வழிபிறக்கும் என்பதற்கு வேறு ஒரு விளக்கமும் கூறுகிறார்கள். வயல்களில் பயிர் வளர்ந்து அறுவடையாகாமல் இருக்கும் காலங்களில் மக்கள் அதன் குறுக்கே நடந்து போக முடியாது. வயல்களைச் சுற்றித்தான் போக வேண்டும். பக்கத்துக் கிராமத்துக்கோ அல்லது வெளியூருக்கோ செல்ல வேண்டியிருந்தால் வயல்களின் குறுக்காகப் போக முடியாது. வேறு பாதை வசதிகளற்ற அக்காலத்தில் நீண்டதூரம் வயல்களைச் சுற்றியே நடந்து செல்ல வேண்டியிருந்தது. இதனால் வீண் சிரமங்களை எதிர் கொள்ள நேரிட்டது.

தை பிறந்து விட்டால் அறுவடை ஆரம்பமாகிவிடும். அறுவடை ஆகிவிட்டால் சுற்றிப் போக வேண்டிய சிரமம் ஏற்படாது. குறுக்காக எளிதாக நடந்து சென்றேவிடலாம். இதனைக் கருத்திற் கொண்டே நம் முன்னோர் 'தை பிறந்தால் வழி பிறக்கும்' எனக் கூறினார்கள் என்பர்.

எந்த வகையில் கருத்துக் கொண்டாலும் தை பிறந்தால் மக்கள் மனதில் புதியதோர் உணர்வு ஏற்படும் என்பதும் புதுவழி பிறக்கும் என்பதும் நம்மனோரின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

## 20 கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கைவைக்காதே

வாழ்க்கையில் இன்ப துன்பங்களை ஏற்றுக் கொள்வது எப்படி? இதனைப் பழமொழிகள் பல நமக்குப் பாடமாகக் கற்பிக்கின்றன. துன்பம் வரும் போது சோர்ந்து துவண்டு போவதும் இன்பம் கிடைக்கும் போது துள்ளிக் குதிப்பதும் மனித இயல்பு. இது தவறு. இன்பம் வரும் போதும் துன்பம் வரும் போதும் அவற்றை இயல்பாக ஏற்றுக் கொள்ள வேண்டும். வறுமையிலும் செம்மையாக, துன்பங்களை அமைதியாகச் சுமக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

கப்பல் வியாபாரி, ஒரு கப்பல் கவிழ்ந்து விட்டதற்காக அதனால் ஏற்பட்ட நட்டத்திற்காகக் கவலைப்பட்டுக் கொண்டு கன்னத்தில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டால் அவன் தொழில் என்னாவது? அவனது வியாபாரமும் பாதிக்கப்படும். மேலும் நஷ்டம் ஏற்பட ஏதுவாகும். ஆதலால் கவலையாகக் கன்னத்தில் கை வைத்துக் கொண்டு சோர்ந்து அமர்ந்து விடாதே என்று இப் பழமொழி நமக்கு எச்சரிக்கை செய்கிறது.

கன்னத்தில் கை வைக்காவிட்டால் மட்டும் கவலை போய்விடுமா? கன்னத்திற்கும் கவலைக்கும் என்ன தொடர்பு? கன்னத்தில் கைவைக்காமல் இருந்தால் கப்பல் கிடைத்து விடுமா? கவலைப் படாதே என்பதைக் கன்னத்தில் கைவைக்காதே என்று கூற முற்பட்டதேன்? இவ்வாறெல்லாம் வினாக்கள் தொடுக்கலாம். இப் பழமொழியின் உண்மையான பொருள் தான் என்ன?

'கன்னத்தில் கைவைப்பது' என்பதற்குப் புதியதோர் பொருள் உண்டு. முற்காலத்தில் இப்புதிய பொருளின் அடிப்படையிலேயே நம்முன்னோர் இப் பழமொழியைப் பயன்படுத்தினர். அப்புதிய பொருள் தான் என்ன?





கன்னத்தில் கைவைப்பது என்பது திருடர்கள், பிறர் பொருள்களைக் களவாடுதற்காகக், கன்னக்கோலிடுவதைக் குறிக்கிறது. அதாவது இரும்புக் கடப்பாரையை எடுத்து இரவு நேரத்தில் திருட்டுத்தனமாக வீட்டுச் சுவர்களைத் துளைத்து - இடித்து உள்ளே நுழைந்து திருடுவதைக் குறிக்கிறது.

உனக்குப் பெரிய நஷ்டம் ஏற்பட்டாலும் அதனை நீ தாங்கிக் கொள்ள வேண்டுமே தவிரப் பிறர் பொருளைக் கவர்ந்து கொள்ளக் கருதாதே - அதாவது கன்னக்கோலில் கை வைக்காதே - களவு செய்ய நினைக்காதே என்ற கருத்தையே இப் பழமொழி நமக்குக் கற்பிக்கிறது.

"ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை" என்ற வள்ளுவர் வாக்கினையே இப் பழமொழி அடியொற்றிச் செல்கிறது. "கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கைவைக்காதே" என்னும் பழமொழியின் கருத்தினை நாம் புரிந்து கொண்டால் இன்ப துன்பங்களை அமைதியாக ஏற்று வாழப் பழகிக்கொள்வோம்.

**காலம் காலமாக மனித வாழ்க்கையுடன் ஒட்டி வரும் பழக்க வழக்கங்கள், படிப்பினைகள், சூழ்நிலைகளில் எழுந்தவைகள் பழமொழிகள். அவை அனுபவக் கடலில் மூழ்கி எடுக்கப்பட்ட முத்துக்கள்.**

## 21 ஆற்றிலே போட்டாலும் அளந்து போடு

இந்தப் பழமொழி நாம் வாழ்வில் கைக்கொள்ள வேண்டிய நல்ல கருத்தொன்றை வலியுறுத்துகிறது. நாம் எதைச் செய்தாலும் அளவறிந்து செய்ய வேண்டும். சிக்கனமாக இருக்க வேண்டும். வீண் செலவு செய்யக்கூடாது என்ற பொருளினை இப் பழமொழி கூறுகிறது என்பர்.

ஆனால் இப் பழமொழியின் உண்மையான கருத்து என்ன? என்பதை நாம் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். உபயோகமற்றது எனக் கருதும் பொருட்களை எடுத்து வந்து ஆற்றில் போடுவதாகக் கருதிக் கொள்வோம். எவ்வளவு பொருட்களைப் போடுகிறாய் என்று நீ நிதானமாக நின்று கணக்கில் வைத்துக் கொண்டுதான் போட வேண்டும் என்கிறது பழமொழி. இப்படிச் சொல்லக் காரணம் என்ன? இதிலிருந்து இரண்டு விடயங்கள் நமக்குத் தெளிவாகின்றன.

ஒன்று ஆற்றில் பொருள்களைப் போடுமுன் இவ்வளவு பொருளைப் போடப் போகிறோமே; இவற்றை ஆற்றில் போடுவது அவசியந்தானா? என்ற எண்ணமும் உதயமாகும்.

மற்றொன்று வேறு வகையானது. ஆற்றில் கொண்டுபோய் விட்ட பிறகும் கூட நம்மனம் சும்மா இராது. இவ்வளவு பொருட்கள் தேவையில்லாமல் இவ்வளவு காலம் நம்மிடம் ஏன் இருந்தன? என்ற எண்ணம் ஏற்படும்.

இவற்றின் விளைவு தான் என்ன? நாம் எதைச் செய்தாலும் நிதானித்து, ஆர அமரச் சிந்தித்து, கணக்கிட்டுச் செய்யும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற பாடத்தை இப் பழமொழி நமக்குக் கற்பிக்கிறது. தேவையற்ற பொருள்களைக் கழிக்கும் போது கூட, சிந்தித்துத்தான் செயல்பட வேண்டும் என்று வலியுறுத்துகிறது.





ஆற்றில் போட்டாலும் என்ற தொடரில் வரும் 'உம்' என்னும் உருபு இப் பழமொழியின் கருத்துக்கு அழுத்தம் கொடுக்கிறது. ஆற்றில் போடுவதானாலும் அளவறிந்து போட வேண்டும் என்ற கருத்தினை இது வலியுறுத்துகிறது.

இப் பழமொழிக்குத் தற்காலத்தில் புதியதோர் கருத்தும் கூறப்படுகிறது. ஆற்றில் போடுவது என்பதே தவறு. இதில் அளந்து போட்டால் என்ன? அளக்காமல் போட்டால் என்ன? எதுவும் நேர்ந்து விடாது. எனவே நம்முன்னோர் இப் பழமொழியை முற்கூறிய கருத்தில் கூறவில்லை. 'அகத்தில் போட்டாலும் அளந்து போட வேண்டும்' என்பதே இதன் உண்மையான வடிவமாதல் வேண்டும். அகத்தில் (வயிற்றுக்கு) போட்டாலும் (சாப்பிட்டாலும்) அளந்து போட வேண்டும் (சரியான அளவு சாப்பிட வேண்டும்). அளவுக்கு அதிகமாக உண்ணுதல் கூடாது. அளவுக்கு அதிகமாக (அளந்து உண்ணாமல்) உண்பதே பலவித நோய்கள் தோன்றுவதற்குக் காரணமாயமைகின்றதெனக் கூறப்படுகிறது.

'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு' என்ற பழமொழியும் அளந்துண்ண வேண்டியதன் அவசியத்தையே வலியுறுத்துகின்றது எனலாம். சுருங்கக் கூறின் எச்செயலைச் செய்யும் போதும் நிதானித்து, கணக்கிட்டுச் செய்யும் பழக்கம் நமக்கு ஏற்பட வேண்டும் என்பதையே இப் பழமொழி வலியுறுத்துகிறது எனலாம்.

## 22 பதறாத காரியம் சிதறாது

இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைப் புகட்டுகிறது. நாம் எக்காரியத்தைச் செய்தாலும் பதற்றமின்றி நிதானத்துடன் செய்ய வேண்டுமென இது வலியுறுத்துகிறது. ஒரு செயலை மேற்கொள்ளும் போது பதற்றப்படுவது சிலரது இயல்பாக இருக்கிறது. வேறு சிலர் எந்தச் சந்தர்ப்பத்திலும் பதற்றமின்றிச் செய்வர். இந்த இருவகையினரதும் குணவியல்பை, நன்மை தீமைகளை நன்கு ஆராயும் போது ஓர் உண்மை நன்கு புலப்படுகிறது.

பதற்றத்துடன் செயலில் ஈடுபடும் போது அச்செயல் எதிர்பார்த்த பயனை அளிக்காது கெட்டுவிடுகிறது. பதற்றமின்றி நிதானத்துடன் நன்கு சிந்தித்துச் செய்யும் போது அச்செயல் எதிர்பார்த்த பயனை அளிக்கிறது. பதற்றம் அடையும் போது நம்முடைய மனம் குழம்பிப் போகிறது. மனம் குழம்பிய நிலையில் மேற்கொள்ளப்படும் எக்கருமமும் வெற்றியளிக்காது. மனம் தெளிவற்ற நிலையில், நமது சிந்தனை மயக்கமடைகிறது, குழம்புகிறது. எனவே அவ்வேளையில் ஒரு கருமத்தை நாம் செய்ய முற்படக்கூடாது.

மனம் தெளிந்த நிலையில் நமது சிந்தனையும் சிறந்ததாக அமையும். அந்நிலையில் மேற்கொள்ளப்படும் கருமம் சிறப்பாக முடியும். இந்த உண்மையை விளக்கும் வகையிலேயே இப் பழமொழி அமைந்துள்ளது.

ஒரு காரியத்தைச் சிந்தாமல், சிதறாமல் சிறப்பாகச் செய்து முடிக்க வேண்டுமாயின் நாம் பதற்றப்படக்கூடாது. பதற்றமின்றி மனதை அமைதிப்படுத்திக் கொண்டு செயல்களில் ஈடுபடுவதே நல்லமுறை யாகும். எதைச் செய்ய வேண்டும்? என்ன செய்ய வேண்டும்? எப்படிச் செய்ய வேண்டும்? என்று நன்கு சிந்தித்துச் செயற்படின் எச்செயலும் வெற்றிகரமாக நிறைவேறும். எனவே எப்போதும் நாம் பதற்றத்தைத் தவிர்த்துக்கொள்ளப் பழகிக் கொள்ள வேண்டும். இந்த உண்மையினையே, " **பதறாத காரியம் சிதறாது** " என்கிற பழமொழி நமக்கு உணர்த்துகிறது.





## 23 உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது

ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஆற்றல் உண்டு. எல்லா ஆற்றல்களும் ஒருவருக்குண்டு என்று கூறிவிட முடியாது. ஆனால் அவரவர் தத்தம் ஆற்றலின் எல்லையை உணர்ந்திருத்தல் அவசியமாகும். தத்தம் ஆற்றலை நன்கு உணராதவர்கள், எல்லை மீறிக் கற்பனை செய்து கொண்டு செயல்களில் ஈடுபடும் போது வீண் தொல்லைகளுக்கும் துன்பங்களுக்கும் இலக்காகிறார்கள்.

இந்த உண்மையினை நமக்கு உணர்த்தும் வகையிலேயே இப் பழமொழி அமைந்துள்ளது. ஊர்க்குருவி எவ்வளவு உயரப் பறந்தாலும் அது பருந்தின் நிலையை அடைந்திட முடியாது என்பதே இப் பழமொழியின் பொருளாகும்.

வானத்தில் உயரப்பறக்கின்ற ஆற்றல் ஊர்க்குருவி, பருந்து இரண்டுக்கும் உண்டு. ஆனால் பருந்து பறக்கின்ற உயரத்துக்கு ஊர்க்குருவியால் பறக்க இயலாது. இந்த உண்மையை உணராமல் ஊர்க்குருவி தன்னைப் பருந்தோடு ஒப்பிட்டுக் கொண்டால் அது அறிவீனமாகும். நம்மில் சிலர் ஊர்க்குருவி போல் தமது ஆற்றலின் எல்லை எதுவென உணராது செயல்களில் ஈடுபடும் போது வேதனைக்குள்ளாகிறார்கள்; சோர்வடைகிறார்கள்.

ஒருவன் தன்னுடைய ஆற்றலை அறிந்திருப்பது எவ்வளவு அவசியமோ, அந்த அளவுக்குத் தனது திறமையின் எல்லையையும் அறிந்திருப்பின் அவன் தன் திறமையை நன்கு வளர்த்துக் கொள்ளவும் முடியும். எதை நம்மால் செய்ய முடியும், எதைச் செய்ய முடியாது என்பதை நாம் அறிந்திருத்தல் வேண்டும். நமது ஆற்றலைக் குறித்த தெளிவான அறிவு நமக்கு இருந்தாற்றான் வாழ்க்கையில் முன்னேற முடியும்.

ஊர்க்குருவியையும் பருந்தையும் ஒப்பிட்டு இப் பழமொழி கூறுவதற்குக் காரணம் என்ன? ஊர்க்குருவி தனது ஆற்றலை, திறமையை, தகுதியை உணராது பருந்தோடு தன்னை ஒப்பிட்டுக் கொள்ளும் போது வீண் பிரச்சினைகள் தோன்றிவிடுகின்றன. ஊர்க்குருவியின் அளவுக்கதிகமான கற்பனையே அதன் தகுதியின்மைக்குக் காரணமாகின்றது.

ஊர்க்குருவி எவ்வளவு உயரத்தில் பறந்தாலும் அதைப் பருந்தென எவருமே ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். பருந்துக்கு இது நிகராகாது என்பது உலகறிந்த உண்மை. எனவே இப் பழமொழியின் மூலம் நாம் நல்லதோர் பாடத்தைக் கற்றுக் கொள்ள முடிகிறது. நமது திறமையை நாமறிவதோடு அதன் எல்லையையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அதே வேளையில் நம்மைவிடத் திறமைமிக்காரோடு நிகராக நாம் முயற்சிக்க வேண்டுமே தவிர, அவர்களுக்கு நிகராகி விட்டோம் என எண்ணுதல் கூடாது.

**பழமொழிகள் மிகக் குறைந்த சொற்களில் நிறைந்த நீதிக் கருத்துக்களை உள்ளடக்கியுள்ளன. அவை நம் வாழ்வியலுக்கு வழி காட்டுவன. அவை நன்று எது? தீது எது? என்பதை எடுத்துக் கூறுகின்றன. அவை இருட்டில் வழிகாட்டும் விளக்குப் போன்றவையாகும்.**





## 24 பந்திக்கு முன்னே ..... படைக்குப் பின்னே!

இப் பழமொழிக்குப் பல்வேறு அர்த்தங்கள் கூறப்படுகின்றன. எங்காவது விருந்து, அன்னதானம் என்றால் நாம் பந்தி இருத்தும் போது முதல் ஆளாகச் செல்ல வேண்டும். முதற் பந்தியில் உட்கார வேண்டும். முதற் பந்திக்கே சகலவிதமான உணவுப் பதார்த்தங்களும் பரிமாறப்படும். எனவே நாம் பந்திக்கு முந்திக் கொள்ள வேண்டும். கடைசியாகப் போனால் முதற் பந்தியில் பரிமாறப்பட்ட உணவுப் பதார்த்தங்கள் பல கிடைக்காமல் போகும். ஆகவே பந்திக்கு முன்னே என்றார்கள்.

போர் நிகழும் போது படையின் முன் வரிசையிற் சென்றால் உயிரிழக்க நேரிடும். பின்வரிசையில் பின்னுக்குச் சென்றால் ஓரளவு தப்பித்துக் கொள்ளலாம். எனவே போருக்குப் போகும் போது பின்னே செல்ல வேண்டும். இதுவே இப் பழமொழியின் கருத்தாகும் என்பர் முன்னோர்.

இக்காலத்தில் இப் பழமொழிக்குப் புதியதோர் அர்த்தம் கூறப்படுகிறது. உணவு உண்ணும் போது நமது வலது கையினால் முன்னால் எடுத்து உண்போம். நம் முன்னோர்கள் பண்டைக்காலத்தில் படையிற் செல்லும் போது எதிரிகளை அழிக்க வல்ல அம்புகளை தம்முதுகில்தான் (அம்பராத் தூணியில்) வைத்திருப்பார்கள். அவற்றை எடுப்பதற்கு வலது கையைப் பயன்படுத்துவர். வலது கை பின்னால் செல்ல நேரிடும். அதனாலேயே பந்திக்கு முன்னே; படைக்குப் பின்னே என்று கூறினார்கள். வலது கையின் செயற்பாட்டை வைத்து இப்புதிய அர்த்தம் கூறப்படுகிறது.

இப் பழமொழிக்கு வேறோர் கருத்தும் கூறப்படுகிறது. 'படைக்குப் பிந்து' என்பதனைக் கோழைத்தனத்தின் குணமெனக் குறைத்து மதிப்பிடாதீர். தாமதம், தரத்தை உயர்த்தும் எனக்கொண்டு, தகுந்த திட்டத்தோடு, வியூகம் அமைத்துப் படைகளைத் திரட்டிச் செல்லும் பக்குவத்தைப் பெற வேண்டும் என்பதையே இது குறிக்கிறது. "வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும் துணைவலியும் தூக்கிச் செயல்" என்னும் வள்ளுவர்வாக்கும் இதனையே வலியுறுத்துகிறது.

## 25 மின்னுவதெல்லாம் பொன்னல்ல

பகட்டைக் கண்டு ஏமாறுவது மனித இயல்பு. மனித சுபாவத்தின் மிகப் பெரிய பலவீனம் இது. அனுபவசாலிகளான நம் முன்னோர்கள் இது குறித்து நம்மை எச்சரிக்கிறார்கள் இப் பழமொழி மூலம்.

'மின்னுவதெல்லாம் பொன்னல்ல' என்னும் பழமொழி நமக்கு நல்லதொரு பாடத்தைக் கற்பிக்கிறது. ஒருவனது எடுப்பான தோற்றத்தை மட்டும் வைத்து அவனை எடை போட்டு, ஈற்றில் ஏமாந்து போகிறோம். மின்னுகின்ற எல்லாம் பொன் என்று எண்ணிவிடுகிறோம். கம்பீரமான தோற்றம், பொருத்தமான உடை, கவர்ச்சியான பேச்சு (நடை, உடை, பாவனைகள்) இருக்கின்ற ஒருவர் நம்மை எளிதில் கவர்ந்துவிடுகிறார். இது இயற்கையுங் கூட. ஆனால், அந்த மனிதரின் குணநலங்களை, பண்புகளை அவரோடு பழகும் போதே புரிந்து கொள்ள முடியும். எனவே தான் தோற்றத்தை வைத்துக் கொண்டு முடிவுகளுக்கு வந்துவிடக் கூடாது. தோற்றத்திற்குப் பின்னேயுள்ள குணங்களை வைத்துத்தான் நாம் முடிவு செய்ய வேண்டும் என்ற பாடத்தை இப் பழமொழி நமக்குக் கற்பிக்கிறது. அவசரப்பட்டு முடிவுகளுக்கு வராமல் ஆர அமரச் சிந்தித்துச் சரியான முடிவுகளுக்கே வரவேண்டும் என்பதை இப் பழமொழி தெளிவுறுத்துகிறது. பழமொழியை மீண்டும் ஒருமுறை வாசித்துப் பாருங்கள்.

'மின்னுவது பொன் அல்ல' என்று இப் பழமொழி சொல்ல வில்லை. 'மின்னுவது எல்லாம் பொன் அல்ல' என்று தான் கூறுகிறது. மின்னுவது பொன் ஆகவும் இருக்கலாம். பொன் அல்லாமலும் இருக்கலாம். எனவே ஏமாந்து விடாது நன்கு அவதானித்து முடிவுக்கு வரவேண்டும் என்று நம்மை வழிப்படுத்துகிறது.

மின்னுவதை மட்டும் வைத்துக் கொண்டு பொன் என்கிற முடிவுக்கு வந்துவிடாதே என்று நம்மை எச்சரிக்கிறது. அவசரப்பட்டு வெளி அழகைக் கண்டு மயங்கிவிடாது நன்கு சிந்தித்து முடிவுக்கு வருதலே சிறந்தது என்ற உண்மையை இப் பழமொழி தெளிவு படுத்துகிறது.





## 26 ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது என்னும் பழமொழி கற்பனா வாதிகளுக்கு நல்ல பாடம் புகட்டுகிறது. இதன் பொருள் தான் என்ன?

ஒருவன் ஏட்டில் எழுதப்பட்ட சுரைக்காயைப் பார்க்கிறான். அதன் உருசியை நினைத்துப் பார்க்கிறான். அதை எவ்வாறெல்லாம் சமைத்தால் சுவையாக இருக்கும் என்றெல்லாம் எண்ணமிடுகிறான். இந்த ஆசை நிறைவேற அவன் ஏட்டில் உள்ள சுரைக்காயை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தால் அவனது எண்ணம் நிறைவேறுமா? இல்லை.

அப்படியாயின் அவன் என்ன செய்ய வேண்டும்? நல்ல சுரைக்காய் விதையைத் தேடிப் பெற வேண்டும். நிலத்தைப் பண்படுத்திப் பயிரிட வேண்டும். நீர் வார்த்துப் பக்குவமாக வளர்க்க வேண்டும். கொடி நன்கு வளரப் பாடுபட வேண்டும். பயன் தரும் வரை பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். இதுவே அவன் செய்யத் தக்கதாகும்.

இப் பழமொழி நமக்கு எதனை நினைவூட்டுகிறது? உழைப்பின் அவசியத்தையும் பயன் கிடைக்கும் வரை பொறுத்திருக்க வேண்டிய கட்டாயத்தையும் நினைவூட்டுகிறது. ஏட்டிலே உள்ளவை நமது எண்ணங்களுக்கு ஆதாரமாகலாம். ஆனால் எண்ணங்கள் செயல் வடிவம் பெற உழைப்புத் தேவை. உழைத்த உடனே பலனை எதிர்பார்த்திடவும் கூடாது. பலனுக்காகக் காத்திருக்க வேண்டும்.

**'ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது'** என்ற பழமொழி நான்கு சொற்களைக் கொண்டுள்ளது எனினும் அது எவ்வளவு அர்த்தங்களைக் கொண்டுள்ளது என்பதை ஆழ்ந்து சிந்திப்பார் அறிந்து கொள்வர். இதே வேளையில் இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தையும் கற்பிக்கிறது. வெறும் ஏட்டுப்படிப்பு மட்டும் பயன்தராது.

நாம் பெறும் கல்வி பயனுள்ளதாக அமைய வேண்டுமாயின் அக்கல்வி செயற்றிறனை வளர்ப்பதாக இருக்க வேண்டும். செயலறிவைத் தராத ஏட்டுப் படிப்பால் பயனில்லை. இந்த உண்மையையே இப் பழமொழி நமக்குச் சுட்டிக் காட்டுகிறது. செயற்றிறன் இல்லாத படிப்பினால் வாழ்க்கையில் நாம் முன்னேற முடியாது.

ஏட்டில் எழுதப்பட்ட சுரைக்காய் எப்படிக் கறி சமைக்க உதவாதோ அதே போன்று செயற்றிறன் அற்ற கல்வியும் பயன்படாது என்ற உண்மையினை இப் பழமொழி அழுத்திக் கூறுகிறது. வாழ்க்கையில் முன்னேறத் துடிப்போருக்கு இது நல்லதோர் பாடமாக அமைகிறது.

**ஏட்டிலே இருக்கிற சுரைக்காய் கறிசமைக்க உதவாது. அது போல ஏட்டில் இருக்கிற சொத்தால் எந்த இலாபமும் கிடையாது. நம் அனுபவத்தில் இருப்பது தான் நமக்குப் பயன்படும்.**





## 27 அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டார்

இந்தப் பழமொழிக்கு குற்றம் சுமத்தப்பட்டிருக்கும் ஒருவனிடம் மேலும் பல உண்மைகளை அறிந்து கொள்வதற்கு அவனைத் தண்டித்தலே தக்கவழி. அதைவிடச் சிறந்த வழி வேறில்லை என்று பொருள் கொள்வர். இதை விட அவனை அடித்து விசாரித்திடாது அவனது அண்ணன் தம்பியை விசாரிப்பதில் பயனில்லை என்றும் கூறுவர். வன்முறையால் காரியம் சாதிக்க முடியும் என்ற கருத்தமைந்ததாக நடைமுறையில் இப் பழமொழியைப் பயன்படுத்தி வருகின்றனர்.

இது தவறான கருத்தென இக்காலத்து அறிஞர்கள் கூறுகின்றனர். பல்வேறு விளக்கங்களையும் முன்வைக்கின்றனர். உண்மையில் இதன் ஆழ்ந்த கருத்தினை ஒரு கணம் நாம் சிந்திக்க வேண்டும்.

இறைவனின் திருவடித்துணை இருந்தால், அதாவது திருவருள் இருந்தால், மாபெரும் பயன்களைப் பெறலாம். மற்றப்படி மனிதர்கள் அவர்கள் அண்ணன் தம்பியாகவே இருந்தாலும் அவர்களது துணை இறைவனின் திருவடித் துணையால் பெறும் பயனுக்கு நிகராகாது. இதுவே இப் பழமொழி கற்றுத்தரும் பாடம் என்பர் ஒருசாரார்.

இராமனின் திருவடிகளைத் தாங்கிய பாதுகைகளை எடுத்துச் சென்ற பரதன், அந்தப் பாதுகைகளையே இராமனது திருவடிகளாக நினைத்துச் சிறப்பாக ஆட்சி செய்தான். இராமனோ, இலட்சுமணனோ (அண்ணன், தம்பி) நேரடியாக உதவாத சூழ்நிலையில் (இராமனது) அடி உதவியது. எனவே அடி உதவுகிற மாதிரி அண்ணன், தம்பி உதவ மாட்டார் என்றும் பொருள் கூறுவர் மற்றொரு சாரார்.

ஒருவனைத் திருத்துவதற்கு அவனை அடித்து நல்வழிப்படுத்துவதே தக்க மார்க்கம் என்பர் வேறு சிலர். இவ்வாறு பலரும் பலவித விளக்கங்களை இப் பழமொழிக்குக் கூறுகின்ற போதிலும் ஆழ்ந்து சிந்திக்கும் போது இறைவனின் திருவடி நமக்கு உதவுவது மாதிரி அண்ணன் தம்பியின் பேருபகாரம் கூடப் பயன் தராது என்ற கருத்தே மிக்க பொருத்தமுடையதாகத் தோற்றுகின்றது.

நாம் வாழ்க்கையில் முன்னேற, நிம்மதிபெற இறைவனின் திருவருளே உதவும். எனவே அவனது திருவடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவமாட்டார் என்ற உண்மையை நாம் மனதிற் பதித்துக் கொள்ளலே சாலச்சிறந்ததாகும்.

## 28 கண் கெட்ட பிறகா சூரிய நமஸ்காரம்

இப் பழமொழி நமக்கு நல்லதோர் எச்சரிக்கையாக அமைகிறது. கண்பார்வை நன்றாக இருக்கும் போது அதிகாலையில் எழுந்து சூரியோதயத்தின் போது சூரியனை வழிபடுவது நல்ல பழக்கம். பழங்காலத்திலிருந்தே இச் சூரிய வழிபாடு பின்பற்றப்பட்டு வருகிறது. இவ்வழிபாட்டைப் பின்பற்றிவந்தால் கண்ணின் ஆரோக்கியம் பேணப்படும். கண்ணுக்கு நோய் வராமலும் கண்கெட்டுப் போகாமலும் பார்த்துக் கொள்ள வேண்டுமாயின் கண்பார்வை உள்ள போதே சூரிய நமஸ்காரத்தில் ஈடுபட வேண்டும்.

கண்கெடுகிறவரை - கண்பார்வை அற்றுப் போகின்றவரை சூரிய நமஸ்காரத்தைப் பற்றிச் சிறிதும் சிந்திக்காது இருந்த ஒருவன், தன் கண் கெட்டுப் போன பின் சூரிய நமஸ்காரத்தின் நன்மையினை அறிந்து கொண்டு அதில் ஈடுபட முனைவதில் எவ்வித பலனும் ஏற்படாது. இது அனுபவபூர்வமாக நாம் அறிந்த உண்மையாகும்.

இந்த உதாரணத்தின் மூலம் நாம் நல்லதோர் பாடத்தைக் கற்றுக் கொள்ளலாம். ஒரு காரியத்தில் நாம் இறங்கும் போது, அது குறித்து ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அதனால் ஏற்படக் கூடிய விளைவுகளை எண்ணிப்பார்க்க வேண்டும். காரியத்தில் ஈடுபட்ட பின் பலன் கிடைக்காத நிலையில் வருந்துவதில் பயன் ஏதும் இல்லை. கண்கெட்ட பின் சூரிய நமஸ்காரம் என்கிற பழமொழியில் ஏளனக் குரலும் ஒலிக்கிறது. கண்பார்வை உள்ள போது சூரிய நமஸ்காரம் செய்யாதிருந்துவிட்டுக் கண்கெட்ட பின் அவ் வழிபாட்டில் ஈடுபடுவது கேலிக்குரியது என்பதையே இப்பழமொழி எடுத்துரைக்கிறது.

நமது நாளாந்த வாழ்க்கையில் எத்தனையோ காரியங்களை, அதன் பின்விளைவுகளை உணராமல் நாம் செய்து கொண்டிருக்கிறோம். அவற்றில் ஈடுபட்ட பின் அவற்றால் ஏற்பட்ட தீய விளைவுகளைக் கண்ட பின்னரே நாம் அவற்றைத்





தவிர்த்திருக்கலாமே என்று கழிவிரக்கம் கொள்கிறோம். காலங்கடந்த பின் கவலை கொள்கிறோம். இந்நிலை தவறானது என்பதையே இப் பழமொழி எடுத்துக் காட்டுகிறது.

**'வெள்ளம் வருமுன் அணை கோல வேண்டும்'** என்னும் பழமொழியும் இக்கருத்தையே எடுத்துக் கூறுகிறது. காலங்கடந்த பின்னர் கவலைப்படுவதில், சிந்திப்பதில் பயனில்லை. 'வருமுன் காப்போம்' என்னும் எச்சரிக்கையுடனேயே எக்கருமத்திலும் ஈடுபட வேண்டும் என்ற உண்மையை இப் பழமொழி நமக்குக் கற்றுத் தருகின்றது.

கண்கெட்ட பின் சூரிய நமஸ்காரம் செய்யாதீர் என அறிவுரை புகட்டுகிறது. நல்ல செயல்களை உரிய வேளையில் உரிய முறையில் செய்திட முயற்சியுங்கள் என்று இப்பழமொழி இடித்துரைக்கிறது. நன்றே செய்மின்! அதுவும் இன்றே செய்மின்! என்று பாடம் புகட்டுகிறது.

**தகுந்த வாய்ப்புள்ள நேரத்தில் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யாமல் வாய்ப்பு நழுவிப்போன பிறகு முயற்சிப்பதால் ஒரு பயனும் இல்லை. அது கண் கெட்ட பின் சூரிய நமஸ்காரம் செய்வது போலாகும்.**

## 29 கண்டது கற்கப் பண்டிதனாவான்

இப் பழமொழி மிகவும் ஆழமான பல அர்த்தங்களைத் தருகிறது. சாதாரணமாகப் பார்க்கும் போது ஒருவன் கண்ணில் படுகின்ற நூல்களை எல்லாம் படிப்பானாயின் அவன் பண்டிதன் ஆகிவிடுவான் என்று கூறுவர். இந்தக் கருத்தில் இப் பழமொழி அமையவில்லை எனறே கூறலாம். ஒருவன் கண்ணில் படுகின்ற நூல்களை எல்லாம் கற்றிட முற்பட்டால் அது இலகுவில் சாத்தியமாகாது. நேர விரயமாகுமே தவிர அவன் பாண்டியத்தியம் மிக்கவனாக மாறமுடியாது.

அப்படியானால் ஒருவன் பண்டிதனாவது எப்படி? நூல்கள் பல இருக்கலாம். அவற்றை எல்லாம் படித்து ஆராய்வது எளிதல்ல. எனவே ஒருவன் தனக்குப் பயன்தரும் நூல்கள் எவையெனக் கண்டு கற்க முற்பட வேண்டும். கண்டு என்ற சொல்லுக்கு ஆராய்ந்து அல்லது தெளிந்து என்று பொருள் கூறுவர். எனவே ஒருவன் நூல்களைப் படிக்கு முன் தனக்குப் பயன்தருவன எவையெனத் தேர்ந்து, தெளிந்து கற்க முனைய வேண்டும். தேர்ந்து படிக்கும் பழக்கம் ஏற்பட்டுவிட்டால் எதையும் ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்குபவனாக அவன் மாறிவிடுவான். அவன் படிக்கும் நூல்கள் யாவும் நல்லவையாக அமைய வேண்டும் என்றால் நல்ல நூல்களைத் தேர்ந்தெடுக்கும் விவேகம் அவனிடத்தே மேலோங்கும். அதுமட்டுமன்றி நல்ல நூல்களை வாசிப்பதால் அவன் குற்றம் களைந்து குணங்கொள்ளும் பண்புடையவனாவான். எதையும் படித்தறிய வேண்டும் என்ற அவா ஏற்படும். அந்த அவா ஏற்பட்டு விட்டால் போதும், அந்த எண்ணமே அவனை அறிவாளி ஆக்கிவிடும் என்று கூறுவர்.

இப்பழமொழி மற்றோர் உண்மையையும் நமக்குப் புலப்படுத்துகிறது. நூல்களைக் கற்போர் சிலர் மேலெழுந்த வாரியாகக் கற்பர். சிலர் ஆழ்ந்து படிப்பர். வேறு சிலர் ஆராய்ந்து படிப்பர். ஆராய்ந்து படிக்கும் போது முன்னர் விளங்காத பல புதிய





விடயங்களை விளங்கிக் கொள்வர். அதன் பேறாக அவர்களது அறிவு மேலும் விருத்தியுறும்.

சில நூல்களை ஒருமுறை படித்துப் பூரணமாக விளங்கிக் கொள்வது இயலாது. அவற்றைத் திரும்பத் திரும்பப் பலமுறை படிக்க வேண்டும். ஒவ்வொரு முறை படிக்கும் போதும் புதுப்புதுக் கருத்துக்கள் கிடைக்கும். புதுப்புதுக் கருத்துக்கள் உதயமாவதால் அவனது சிந்தனை தூண்டப்படும். புதிய எண்ணங்கள் உருவாகும். புதிய கருத்துக்கள் தோன்றும் போது அவனது அறிவு - சிந்தனை மேலும் விருத்தியடையும். அவன் பல்வேறு விடயங்களிலும் தேர்ந்த பண்டிதன் ஆவான்.

'கண்டு கற்கப் பண்டிதன் ஆவான்' என்றும் இப் பழமொழியை அழைக்கலாம். ஏற்ற நூல்கள் எவையெனக் கண்டு அவற்றை ஆராய்ந்து கற்பவன் நிச்சயமாகப் பண்டிதன் ஆவான் என இப் பழமொழி நமக்குப் பாடம் கற்பிக்கிறது.

இப் பழமொழியை இன்னொரு கோணத்திலும் நோக்கலாம். ஆராய்வு அறிவுடையோர் ஒரு பொருளைப் பார்த்ததும் அப்படியே போய்விடமாட்டார்கள். அதைப்பற்றி அறிந்து கொள்ள முற்படுவர்; ஆராய்வர். அதைப் பற்றிய விபரங்களை ஆராயும் போது அந்தப் பொருளைப் பற்றிய அறிவு அவர்களுக்குக் கிட்டும். அதனால் கண்டு கற்க அவர்கள் பண்டிதர்களாகிவிடுவர்.

எனவே ஒரு விடயத்தில் பண்டிதனாக வேண்டுமென்றால் அந்த விடயத்தைப் பற்றி ஆராயும் அவா ஏற்பட வேண்டும். அந்த அவாவின் பேறாக அறிவு பெருகும் என்று அறிவுறுத்துகிறது இப்பழமொழி.

## 30 இக்கரைக்கு அக்கரை பச்சை

தூரத்துப் பார்வைக்கு அழகாயிருப்பதைக் கொண்டு நாம் ஏமாறக் கூடாது என்பதை வலியுறுத்தும் வகையிலேயே இப்பழமொழி அமைந்துள்ளது. ஒரு துறையில் நின்று புல் மேயும் பசுவானது தூரத்தே உள்ள மறு துறையை நோக்குகிறது. அங்கே அடர்த்தியான, செழிப்பான புல் இருப்பது போலத் தோன்றுகிறது. உடனே அது மறு துறையை நோக்கி ஓடிச் செல்கிறது ஆவலுடன்.

அங்கே சென்று பார்த்த போது புல் அடர்த்தியாக, செழிப்பாக இல்லாதிருப்பதைக் காண்கிறது ; ஏமாற்றம் அடைகிறது. இந்த உண்மை முதலிலேயே தெரிந்திருந்தால் இங்கு இப்படி ஓடிவர நேரிட்டிருக்காதே என்று எண்ணுகிறது. இக்கரைக்கு அக்கரை பச்சை என்று ஏமாந்து விட்டோமே என்று வருந்துகிறது.

இந்த நிலமையையே நம்மவர் சிலருக்கும் ஏற்படுகிறது. தாம் செய்து வரும் வேலையை ஏளனமாகக் கருதி வேறு புதிய வேலையை நாடித்திரிவர்; பணம் செலவிட்டு முயற்சி செய்வர். அவ்வேலை கிடைத்த பின்னர்தான் உண்மை புரியும். முன்னர் பார்த்த வேலை இதைவிட எவ்வளவோ மேல். அங்கு மன நிம்மதியுடன் அமைதியாக வேலை செய்தோம். இங்கு வந்து வேதனைப்பட வேண்டியுள்ளதே என்று கூறி வருந்துவர்.

இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைக் கற்பிக்கிறது. நாம் மேற்கொண்டுள்ள பணியில் நிம்மதியுடன் ஈடுபடுவதே சிறந்த வழியாகும். அதை விடுத்துப் பேராசை கொண்டு அலைவதில் பயனில்லை என்ற உண்மையினை இப் பழமொழி சுட்டிக்காட்டுகிறது. கானலை நீரென நம்பி ஓடும் கலைமானாக நாம் வாழக் கூடாது. தூரத்து அழகைக் கண்டு ஏமாறக் கூடாது. யதார்த்தபூர்வமாகச் சிந்தித்துச் செயற்பட வேண்டும்.





## 31 புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது

புலி காட்டில் வாழ்வது. அது விலங்குகளை வேட்டையாடித் தனது இரையாக்கிக் கொள்கிறது. இரை கிடைக்காத போது அது பட்டினிகிடக்குமே தவிரப் பசிக்கிறதே என்று புல்லைத் தின்று பசியாற்றிக் கொள்ள ஒரு போதும் முற்படாது. தனது கொள்கையினின்றும் பின்வாங்காது.

இதே போன்று உன்னத இலட்சிய வாதிகள் - கொள்கை யாளர்கள் எது நேரிடினும் தமது இலட்சியத்தினின்றும் பின்வாங்க மாட்டார்கள். பெரிய மனிதர்கள், பண்புள்ளவர்கள், இலட்சிய வாதிகள் தங்களுக்குக் கஷ்டம் வந்தாலும் தங்களுடைய தகுதிக்குக் குறைவான செயல்கள் எதிலும் ஈடுபடமாட்டார்கள். இதனையே 'அரைக்கினும் சந்தனம் தன்மணம் குன்றாது' என்று நம்முன்னோர் கூறியுள்ளனர். நற்குடிப்பிறந்தோர், நற்பண்புடையோர் எவ்வளவு கஷ்டங்கள் வந்தாலும் தங்கள் தரத்தினின்றும் தாழ்ந்து போக - கீழிறங்க மாட்டார்கள். கீழான செயல்களில் ஈடுபட மாட்டார்கள். இதனையே ஔவையாரும் "கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே" என்றார்.

புலி பயங்கரமான மிருகம். அது வேட்டையாடி உண்பதையே பழக்கமாகக் கொண்டது. இரையைத் தேடித் தானே அடித்துக் கொன்ற பின்னரே உண்ணும். தனது இரையைத் தானே தேடிக் கொள்ளும் பண்புடையது. புற்கள் செழித்து வளர்ந்துள்ளனவே; இலகுவாக, முயற்சியின்றி அவற்றை உண்டு வாழலாமே என்று அது ஒரு போதும் எண்ணுவதில்லை. புல்லை உண்டு வாழ்வதிலும் உயிரை விடுவதே உத்தமமானது எனக் கருதுவது புலி. எனவே தான் புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது என்ற பழமொழி உருவானது.

இந்த உதாரணத்தின் மூலம் இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைக் கற்பிக்கிறது. மானத்தை உயிரினும் மேலாகக்

கருதுபவர்கள் மறத்தமிழர்கள். அவர்கள் மானத்துக்காகவே உயிர் வாழ்பவர்கள். மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் போன்றவர்கள். எவ்வளவு துன்பங்கள், துயரங்கள், நட்டங்கள் விளைந்தாலும் அதைத் தாங்கிக் கொள்வார்களே தவிர மானத்தை விற்று உயிர்வாழ விரும்பமாட்டார்கள். அவர்கள் புலியின் கொள்கை கொண்டவர்கள்.

காட்டில் வாழும் விலங்கான புலிக்கே ஒரு வாழ்க்கை நெறி உண்டென்பதைக் காட்டும் இப் பழமொழி; ஆறறிவு படைத்த மனிதர்க்கு ஒரு வாழ்க்கை நெறி அவசியமென்றும் அந்நெறி தப்பி வாழ மனிதர் முயலக் கூடாதென்றும் அறிவுரை பகர்கிறது.

**எவ்வளவுதான் பசியென்றாலும் புலி புல்லைத் தின்னாது. அது போல ஆன்றோர்கள் எவ்வளவுதான் வறுமை ஏற்பட்டாலும் தன் நிலையிலிருந்து தாழ்ந்து போக மாட்டார்கள்.**





## 32 உப்பிட்டவரை உள்ளளவும் நினை

நன்றி மறவாப் பண்பினை உணர்த்தும் வகையில் அமைந்த பழமொழி இது. இந்தப் பழமொழி நாம் பின்பற்ற வேண்டிய நல்லதோர் நெறியை நினைவூட்டுகிறது.

உப்பின் அருமை அனைவருக்கும் தெரியும். ‘உப்பில்லாப் பண்டம் குப்பையிலே‘ என்பதும் ஒரு முதுமொழியாகும். அறு சுவையில் மற்றவை அனைத்தும் இருந்தும் உப்பு மட்டும் இல்லையென்றால் அவையனைத்துமே சுவைபயக்கமாட்டா. எனவே தான் உப்பில்லாப் பண்டம் குப்பையிலே என்று கூறுவர். உணவை நன்கு இரசித்து உண்பதற்கு ஏனைய சுவைகளுடன் உப்பும் அவசியமாகிறது. உப்புச்சுவை சேராவிட்டால் ஏனைய சுவைகள் இருந்தும் பயனில்லாமல் போய்விடும். இதனை நன்குணர்ந்தே நம் முன்னோர் உப்புக்கு முக்கியத்தும் வழங்கி வந்துள்ளனர்.

இந்த வகையிற்றான், உண்ணும் உணவுக்கு உப்புக் கொடுத்து உதவியவர்களை, உயிர் உள்ள வரை மறக்கக்கூடாது என்ற நல்லதோர் பாடத்தை இப் பழமொழி நமக்குக் கற்றுத்தருகிறது.

மனிதன் மனிதனாக வாழ வேண்டுமாயின் அவன் மற்றோர்களால் மதிக்கப்படும் தகுதிபடைத்தவனாக விளங்க வேண்டும். உப்பின் தேவையை உணர்வது போன்று பிறர் அவனது தேவையை உணர வேண்டும். இதே வேளையில் மனிதன் உணர்ச்சியுள்ளவனாக வாழ வேண்டும். சூடு சொரணையுள்ளவனாகத் திகழ வேண்டும். இல்லாவிட்டால் அவனை உப்புச்சப்பில்லாத, உணர்ச்சியற்றவன் எனறு சமூகம் பழித்துரைக்கும்.

சமூக வாழ்க்கையில் மனிதன் மனிதனாக வாழவேண்டுமாயின் அவன் தன் மானம் உள்ளவனாக, எதையும் நன்கு அறிந்து, உணர்ந்து, உணர்வு பூர்வமாகச் செயற்படுபவனாக விளங்க வேண்டும். மனிதன் மனிதத் தன்மை உள்ளவனாக, பண்புள்ளவனாக

வாழ்வதற்கு உதவுபவர்கள், உனக்கு உப்புப் போன்று உதவுபவர்கள் எனலாம். அத்தகையவர்களை உயிருள்ளவரைக்கும் மறக்காதே என்று இப் பழமொழி நமக்குப் பாடம் புகட்டுகிறது.

"காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப் பெரிது" என்ற வள்ளுவர் வாக்கை ஒரு கணம் எண்ணிப் பாருங்கள். உப்பு மிகவும் சிறிய பொருள். விலை மலிவானது. ஆனால் அதன் தேவை அனைவருக்கும் உண்டு. அற்பபொருளான உப்பைத் தருகின்றவர்களை உயிருள்ள வரை மறக்காதே என்று அறிவுரை கூறும் இப் பழமொழி அதனூடாக நல்லதோர் நெறியையும் நமக்குக் காட்டுகிறது. காலத்தினாற் செய்த உதவி உலகை விடப்பெரிது என்று வலியுறுத்துகிறது. உப்பு சிறியதாயினும் அது தேவைப்படும் வேளையில் அதனைக் கொடுத்துதவுவோரை நாம் மறக்கக்கூடாது. அதே போன்று ஒருவன் காலமறிந்து செய்த உதவியை, - நன்றியுடன் நாம் என்றும் மறவாது போற்ற வேண்டும். இந்த உண்மையினையே உப்பிட்டவரை உள்ளளவும் நினை என்ற பழமொழி நமக்குக் கற்றுத்தருகின்றது.

சுருங்கக் கூறின் ஒருவர் சிறிய நன்மை செய்தாலும் அவரை மறக்காது என்றும் நன்றியுடன் பாராட்டுதலே நமது கடமையாகும். இதனையே இப் பழமொழி வலியுறுத்துகிறது. உதவி சிறியதாயினும் அது உரிய தருணத்தில் நமக்கு உதவுகிறது. எனவே அந்த உதவியைச் செய்தவரை உயிர் உள்ளவரை நாம் மறக்கக் கூடாது.





## 33 எரிகிற வீட்டில் பிடுங்கினது இலாபம்

வீடு ஒன்று தீப்பற்றி எரிகிறது. வீட்டுச் சொந்தக்காரன் தீயை அணைத்திட முயல்கிறான். அதே வேளை அங்கு கூடிய அயலவர்கள் அவனுக்குஉதவி செய்ய வேண்டும். பொருட்களை அப்புறப்படுத்தி உதவவேண்டும். அதை விடுத்து அகப்பட்ட பொருள்களை அவர்கள் எடுத்துச் செல்வார்களாயின் அது நற்செயல் ஆகாது. அது வீட்டுச் சொந்தக்காரனுக்கு மேலும் வேதனையை அளிக்கும் செயலாகவே அமையும். வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது போலாகும். எரிகிற வீட்டில் பிடுங்கினது இலாபம் என்னும் இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைப் புகட்டுகிறது.

ஒருவன் துன்பப்படுகின்ற போது அவனுக்கு உதவி செய்யவே முற்பட வேண்டும். அவனது தேவைகளை நிறைவேற்றிட முயல வேண்டும். அதை விடுத்து அவனிடமிருந்து எதையேனும் அபகரிப்பதற்கு முயற்சிக்கக் கூடாது. அதை வலியுறுத்தும் வகையிலேயே இப் பழமொழி அமைந்துள்ளது.

மற்றவர்களுடைய துன்பத்தில் பங்கு கொள்வதே மனிதத் தன்மையுடைய செயலாகும். எரிகிற வீட்டில் பிடுங்கினது இலாபம் என்று கருதுவது மனிதப் பண்பல்ல. அத்தகைய செயலை "எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்தாற்போல" என்றே கருத வேண்டும்.

எனவே எவ்வேளையிலும் "எரிகிற வீட்டில் பிடுங்கினது இலாபம்" என நாம் கருதிச் செயற்படல் ஆகாது.

## 34 ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

பிள்ளைப் பருவத்தில் ஏற்படாத நல்ல பழக்கங்கள் பெரியவர்களாக வளர்ந்த பின் ஏற்படும் என்று எதிர்பார்க்க முடியாது என்ற கருத்தினை இந்தப் பழமொழி நமக்குக் கூறுகிறது. இளமையில் பழகும் பழக்கம் இலகுவில் மனதில் ஆழப் பதிந்துவிடுகிறது. இதனாலேயே எந்த விடயத்தையும் இளமையிற் கற்றுக் கொள்ள வேண்டும் என்று நம்முன்னோர்கள் வலியுறுத்தி வந்துள்ளனர். **"இளமையிற் கல்வி சிலையில் எழுத்து"** , **"தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்"** என்னும் பழமொழிகளும் இக்கருத்தினையே பெரிதும் வலியுறுத்துகின்றன.

ஒருவனுடைய வாழ்வில் இளமைப் பருவம் மிகமிக முக்கியமானது. இப்பருவத்தில் அவன் கற்றுக் கொள்பவையே அவனது வாழ்வுக்கு அடித்தளமாக அமைகின்றன. இளமையில் நல்ல பழக்கங்களை நாம் கற்றுக் கொள்ள வேண்டும். அவை நமது மனங்களில் பசுமரத்தாணி போற் பதிந்து விடும். முதுமைப் பராயத்திலும் இளமைப் பழக்கங்களே தொடருமாதலால் முதுமைப் பருவத்தில் அவற்றை அகற்றுவது முடியாத செயலாகிவிடும். எனவே இளமையில் நல்லவற்றை, சீரிய விழுமியங்களைக் கற்றுக் கொண்டால் வாழ்க்கை பூராகவும் நாம் நல்லவர்களாக, வல்லவர்களாக வாழமுடியும்.

இளமையில் தீய பழக்கங்களைப் பழகிக் கொண்டுவிட்டால் முதுமையிலும் அவை நம்மைத் தொடரும். நம்முடைய வாழ்க்கைப் பாதையினையே திசை திருப்பிக் கெடுதல்களை உண்டுபண்ணும். இதனையே "ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?" என்கிறது பழமொழி.

ஐந்து வயதிலேயே - இளமைப் பருவத்திலேயே உடலை வளைத்து உழைக்கக் கற்றுக் கொள்ளுங்கள். உடலுக்கும் உள்ளத்துக்கும் நல்ல பயிற்சி கொடுங்கள். அந்தப் பயிற்சி வாழ்நாள்





முழுவதும் நமக்கு நல்ல துணையாக அமைந்து நம் வாழ்வை நல்வழிப்படுத்தும்.

இளமைப் பருவத்தில் கல்விப்பயிற்சி அளிப்பதன் நோக்கமும் இதுவே. இளமையில் பெறவேண்டிய பயிற்சியை முதுமையிற் பெற முற்படுவது எளிதல்ல. ஆர்வம் இருந்தாலும், முயற்சி பல செய்தாலும் முதுமை இடம் கொடுக்காது. எனவே இளமையிற் கற்க வேண்டியவற்றை உரிய வேளையிலே கற்றுக்கொள்ள முற்பட வேண்டும். காலம் கடந்தபின் கற்றிட முயல்வது உரிய பயனைத்தராது. ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையப் போவதில்லை.

இந்த உண்மையினை இப் பழமொழி அருமையாக நமக்குச் சொல்லித்தருகிறது. ஐந்து வயதிலேயே உடலுக்கும் உள்ளத்துக்கும் நல்ல பயிற்சியை நாம் அளித்தல் வேண்டும். அப்பயிற்சி வாழ்நாள் முழுதும் நமக்கு உறுதுணையாக விளங்கும். வாழ்வு வளம் பெறத் துணை செய்யும். இதனை நாம் மறக்கக் கூடாது.

## 35 காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு

காக்கை அழகான பறவை அல்ல. அதன் நிறம், அதன் தோற்றம், குரல் எல்லாமே அழகானவை அல்ல. குயிலைப் போல இனிமையான குரலும் கிளியைப் போல அழகான தோற்றமும் மயிலைப் போலக் கவர்ச்சியான சாயலும் காக்கைக்கு இல்லை. ஆனால், அந்தக் காக்கைகூடத் தன்னுடைய குஞ்சைப் பொன்குஞ்சு போலக் கருதி அன்புடன் வளர்க்கிறது என்னும் கருத்தை இப் பழமொழி பிரதிபலிக்கிறது.

இப் பழமொழியை நாம் இரு கோணங்களில் நோக்கலாம். எவரும் தமக்குச் சொந்தமானதை, உரிமையுடையதை உயர்ந்தது, சிறந்தது என்று எண்ணுவது இயல்பு. பிறர் என்ன கருதினாலும் அவர்களைப் பொறுத்தவரையில் அவை உயர்ந்தவையே. அதனை ஏற்றுக் கொண்டு குறைகளைத் தவிர்த்துக் குணங்காணுதல், சகித்துக் கொள்ளுதல் என்பது ஒரு நிலையாகும்.

மற்றொரு வகையில் இப் பழமொழியை நோக்கும் போது தன்னுடையது, தன் இனம் சார்ந்தது என்று எண்ணி அன்பு செலுத்துவது, ஒன்றைப் பெருமையாக எண்ணுவது தவறாகும். இந்த இரு நிலைகளிலும் நாம் தெளிவாகச் சிந்தித்துச் செயற்பட வேண்டும்.

தன் குழந்தை ஒரு போதும் தவறே செய்யாது என்று வாதிடுகிறாள் தாய். அயல் வீட்டுக் குழந்தையே குற்றம் செய்தது என்று குற்றம் சாட்டுகிறாள். தன் மகனின் மீது கொண்ட பாசத்தால் அவனுடைய தவறை மன்னித்துப் பிற குழந்தை மீது குற்றம் சுமத்துகிறாள். இங்கே அவள் தன் குழந்தை மீது கொண்ட பாசமே குழந்தையின் குற்றத்தை மறைத்து விடுகின்றது.

காக்கை கருமையான தன்குஞ்சைப் பொன் குஞ்சு என்று எண்ணுகிறது. அதன் தாயன்பே அதற்குக் காரணமாகும். மற்றவர்களின் பார்வைக்கு அது அழகற்றதாக இருக்கலாம். ஆனால், காக்கையைப் பொறுத்த வரையில் அது பொன்குஞ்சு தான்.





இந்தப் பழமொழி நமக்குக் கற்பிக்கும் பாடம் தான் என்ன? நம்முடையது என்பதற்காக ஒன்றை நாம் உயர்வாக எண்ணினாலும் பிறரது பார்வையில் அதன் குறைபாடு பளிச்சென்று தெரியவே செய்யும். எனவே நம்முடையது, பிறருடையது என்று எண்ணுவதை விடுத்து யதார்த்த பூர்வமாக நடுநிலையுடன் சிந்தித்துச் செயற்படுவதே சிறந்த வாழ்க்கை நெறியாகும்.

காக்கைக் குஞ்சு அழகின்றி கறுப்பாக இருந்தாலும் தாய்க் காகத்துக்கு அதன் குஞ்சு பொன் குஞ்சுதான். அது போலவே தான், பெற்ற தாய் தன் பிள்ளை எப்படி இருந்தாலும் உயிராக நேசிப்பாள் என்ற உண்மையை நாம் மறந்து விடக்கூடாது.

## 36 கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை

இப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைக் கற்பிக்கிறது. ஒரு காரியத்தை மேற்கொள்ளும் போது அதில் வெற்றியும் தோல்வியும் ஏற்படுவது சகசம். ஆனால், அக்காரியத்தில் ஈடுபடப்பயந்து பின்வாங்க முடியாது. நமது சிந்தனைக்கு ஏற்றதெனக் கருதும் காரியத்தில் துணிந்து ஈடுபட வேண்டும். அதைவிடுத்து, ஒருவித முடிவுக்கு வரமுடியாமல் சரியா, தப்பா எனச் சஞ்சலப்பட்டுக் கொண்டு ஊசலாடுதல் கூடாது. இதனை நல்லதோர் உதாரணத்தின் மூலம் இப் பழமொழி விளக்குகிறது.

மீசை உள்ளவன் ஒருவன் கூழ் குடிக்க ஆசைப்படுகிறான். ஆனால், அதே வேளையில் தன் மீசையில் கூழ் ஒட்டிக்கொண்டு விடுமோ என்று கவலைப்படுகிறான். இதையே கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை என்று பழமொழி கூறுகிறது. கூழ் குடிக்க விரும்புவன் மீசையில் ஒட்டிக்கொள்ளுமே என்று கவலைப்பட்டால், அவன் செய்யத்தக்கது என்ன? ஒன்றில் கூழ் குடிக்கும் எண்ணத்தைக் கைவிட வேண்டும் அல்லது மீசையை எடுத்து விட வேண்டும். இரண்டில் ஒன்றை அவன் முடிவு செய்ய வேண்டும். அதைவிடுத்து இரண்டுக்கும் ஆசைப்பட்டு ஒரு முடிவுக்கும் வராதிருந்தால் இரண்டு காரியமுமே நடக்காது. காரியம் சிறிதாக இருக்கலாம். ஆனாலும் ஒரு முடிவுக்கு வரமுடியாதவர்களின் மனநிலையை இப் பழமொழி உதாரணமூலம் நமக்குப் புலப்படுத்துகிறது.

சமூகத்தில் இப்படிப்பட்டோர் பலரை நாம் கண்டிருக்கிறோம். இவர்கள் தீர்மானம் எதுவும் மேற்கொள்ள முடியாது தயங்குவதையும் பார்த்திருக்கிறோம். எந்த விடயத்தைப் பற்றியும் சிந்தித்து முடிவெடுக்கும் ஆற்றல் அற்றவர்களாகவும் எதற்கும் ஆசைப்படுபவர்களாகவும் விளங்குவதையும் கண்ணாரக் கண்டிருக்கிறோம். இந்த ஊசலாடும் மன நிலையைக் கிண்டல் செய்யும் வகையிலேயே இப்பழமொழி அமைந்துள்ளது. சிலசந்தர்ப்பங்களில், ஒரு செயலில் ஈடுபடமுற்படும் போது சரியோ,





தவறோ, முடிவுக்கு வரவேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. அவ்வேளையில் ஒரு முடிவைக் காணாவிடில் அக்காரியம் கைநழுவிப் போகவும் கூடும். எனவே தான் இரண்டும் கெட்டான் நிலையை விடுத்து உறுதியான ஒரு முடிவினை மேற்கொள்ளுதல் வேண்டும். ஈடுபடும் காரியம் அனைத்திலும் வெற்றி கிட்டும் என்று எதிர்பார்க்க முடியாது. இந்த உண்மையை உணர்ந்து தெளிவான முடிவுடன் செயல்களில் ஈடுபட வேண்டும். தோல்வியை வெற்றியாக்க முயற்சிக்க வேண்டும். எதற்கும் தயாராக இருக்க வேண்டும்.இதை விடுத்துக் கூழுக்கும் மீசைக்கும் ஆசைப்பட்டால் வாழ்க்கையில் முன்னேறவே முடியாது. இந்த இரண்டும் கெட்டான் நிலை உள்ளவன் ஒரு போதும் காரியம் சாதிப்பவனாக மிளிர முடியாது.

ஒருவனது வாழ்க்கையை எடுத்துக் கொண்டால் உரியகாலத்தில் அவன் மேற்கொள்ளும் முடிவுகளே அவனது வாழ்க்கையில் பல திருப்பங்களை ஏற்படுத்திவிடுகிறது. நெருக்கடிகளின் போது அவன் எடுத்த தெளிவான முடிவே அவனது வெற்றிக்குக் காரணமாக அமைகிறது. இந்த உண்மையை நாம் நன்குணர்ந்து, ஊசலாடும் மனநிலையை விடுத்துத் தெளிவான முடிவுகளை எடுக்கப் பழகிக் கொள்ள வேண்டும். அதனையே இப் பழமொழி அழகான உவமானத்தின் மூலம் நமக்கு விளக்குகிறது.

## 37 தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்

நல்ல கருத்துக்களாயினும் தீய கருத்துக்களாயினும் குழந்தைப் பருவத்தில் குழந்தைகளின் உள்ளங்களில் எளிதாக ஆழப் பதிந்துவிடுகின்றன. அதன் பாதிப்பிலிருந்து எந்தக் குழந்தையும் தப்பிவிட முடியாது. சுடுகாடு போகும் வரை அதாவது இறந்து போகும் வரை அது நீடிக்கும் என்னும் கருத்தையே இப் பழமொழி கூறுகிறது.

குழந்தைப் பருவத்தில் குழந்தையின் ஆழ்மனதில் பதிந்து விடும் பழக்கங்களை - எண்ணங்களை பெரியவனான பின்னரும் மாற்றிக் கொள்ளுதல் இலகுவல்ல. குழந்தைப் பருவத்தில் பதிந்து விடும் எண்ணங்களே பிற்கால வாழ்க்கைக்கு அடித்தளமாக அமைகின்றன. எனவே தான் குழந்தையின் மனதில் நல்ல எண்ணங்களைப் பதியச் செய்ய வேண்டும் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். நமது வாழ்க்கையின் போக்கு நல்லதாக அமைய வேண்டுமாயின் இது மிக மிக அவசியமாகும்.

இப் பழமொழியில் வரும் தொட்டில், சுடுகாடு என்னும் இரு சொற்களும் மிக்க ஆழமான கருத்தை நமக்குப் புலப்படுத்துகிறது. தொட்டிலில் குழந்தையை இட்டுத் தாலாட்டுப் பாடி வளர்ப்பாள் தாய். அவள் தாலாட்டுப் பாடும் போதே நல்ல கருத்துக்களை, எண்ணங்களை வெளிப்படுத்திக் குழந்தையின் பிஞ்சு மனதில் பதியச்செய்கிறாள். குழந்தைப் பருவத்திலேயே பெற்றோரின் செய்கைகளும், கூற்றுக்களும் குழந்தையின் மனதில் ஆழப்பதிந்து விடுகிறது. தொட்டில் என்ற சொல் குறிக்கும் மிக ஆழமான கருத்து இதுதான்.

சுடுகாடு என்ற சொல்லும் மிக்க சிந்தனைக்குரியது. ஒருவனது வாழ்க்கையின் இறுதிக் கட்டம் சுடுகாட்டிலேயே முடிவடைகிறது. அவன் இறந்த பின் சுடுகாட்டில் அவனுடைய பிணத்தைத் தீயிட்டுக் கொழுத்திய பின் மக்கள் அவனைப் பற்றி என்ன பேசிக்





கொள்கிறார்கள் என்பதை ஒருகணம் சிந்தித்துப் பார்த்தால் இதன் உண்மை விளங்கும். மக்கள் அவனைப் பாராட்டிப் பேசுவதும், பழி சொல்லிப் பேசுவதும் அவன் தொட்டிலில் - குழந்தைப் பருவத்தில் கற்றுக் கொண்ட பழக்க வழக்கங்களை அடியொற்றியதாகவே அமையும்.

இப் பழமொழி பெற்றோரின் குறிப்பாகத் தாயின் பொறுப்புக் களை நன்கு வலியுறுத்துகிறது. '**தாயைப்போலப் பிள்ளை நூலைப் போலச் சீலை**' என்ற பழமொழியும் தாயின் பழக்க வழக்கங்களின் பிரதிபலிப்பே பிள்ளையிடம் காணப்படும் என்ற உண்மையை உணர்த்துகிறது. குழந்தை வளர்ப்பில் பெற்றோர்களின் பொறுப்பினை இப் பழமொழி மிக அழுத்தமாக வலியுறுத்துகிறது.

எனவே பெற்றோர்கள் குழந்தை வளர்ப்பில் மிக்க கவனம் கொள்ள வேண்டும். தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் தொடரும் என்பதை நன்குணர்ந்து செயற்பட வேண்டும்.

'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்னும் பழமொழிக்குத் தற்காலத்தில் புதியதோர் விளக்கம் கூறப்படுகிறது. தொட்டிலில் இருக்கும் குழந்தைக்கு நன்மை எது, தீமை எது என்பது விளங்காது. அது வளர வளரப் புத்தியும் வளரும். புத்தி வளர வளர தப்பு எது? இதனைச் செய்யலாமா? செய்யக்கூடாதா? என்பதைச் சிந்தித்துச் செயற்பட முற்படும். பெரியோர்கள் தவறைச் சுட்டிக்காட்டினால் குழந்தை நாளடைவில் திருந்திவிடும். எதைச் செய்ய வேண்டும்? எதைச் செய்யக்கூடாது? என்பதை அறிந்து கொள்ளும். இங்கு சுட்டிக்காட்டுதல் முக்கியத்துவம் பெறுகிறது. எனவே "**தொட்டில் பழக்கம் சுட்டிக்காட்டும் வரை**" என்றே கொள்ளுதல் வேண்டும் என இக்காலத்தவர் சுட்டிக்காட்டுகின்றனர். பேச்சு வழக்கில் சுட்டிக்காட்டும் வரை என்பது சுடுகாடு வரை என மருவி வழங்கி வருகிறதாகச் சிலர் இப் பழமொழிக்குப் புதிய அர்த்தம் கூறுகின்றனர். இப் பழமொழிக்கு எத்தகைய அர்த்தம் கூறினும் குழந்தைப் பருவத்தில் குழந்தையின் மனதில் பதியும் எண்ணங்கள் பழக்க வழக்கங்கள் இறுதிவரை நீடிக்கும் என்பதே உண்மையாகும்.

## 38 காற்றுள்ள போதே தூற்றிக்கொள்

விவசாயிகள் அறுவடையான நெல்லை, பதரையும் தானியத்தையும் பிரிப்பதற்காகத் தூற்றுவார்கள். காற்றுள்ள போதே தான் தூற்றுவார்கள். தூற்றினாற்றான் இலகுவில் அவற்றைப் பிரிக்க முடியும். காற்றின் வேகத்தில் பதர் பறந்திடக் கனமான நெல்மணிகள் கீழே விழும். இதனால் தானியத்தைப் பிரிக்கும் வேலை விரைவில் முடிவுறும்.

தூற்றும் வேலையைக் காற்று இல்லாத வேளையில் மேற் கொண்டால் பயன்தராது. பதரும் தானியமும் பிரிபடாது போகும். காற்றுள்ள சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டால் வேலை எளிதில் முடிவடைந்து விடும்.

இதே போன்றுதான் வாழ்க்கையில் முன்னேற முடியாமல் பலர் தவிப்பதற்குக் காரணம் அவர்கள் கிடைத்த சந்தர்ப்பங்களைத் தவறவிட்டமையேயாகும். சந்தர்ப்பங்களைத் தக்க வகையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற உண்மையினை வலியுறுத்தும் வகையிலேயே இப் பழமொழி அமைந்துள்ளது.

நமக்குச் சந்தர்ப்பங்கள் எப்போதும் சாதகமாக அமைவதில்லை. சந்தர்ப்பம் கிட்டும் போது அவற்றைத் தவறவிடாது பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அங்ஙனம் பயன்படுத்திக் கொள்ளமுடியாதவர்கள் வாழ்க்கையில் ஒரு போதும் முன்னேற முடியாது.

சந்தர்ப்பம் கிட்டும் போது சிலர் அசட்டையாக இருந்து விடுகின்றனர். பின்னர் அதிஷ்டம் தவறிவிட்டதே என்று வருந்துவர். “காற்றுள்ள போதே தூற்றிக் கொள்” என்று கூறும் இப் பழமொழி, சந்தரப்பம் கிடைக்கும் போது அதனைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறிவிடாதே என்று நம்மை விழிப்படையச் செய்கிறது. இதனை ஓர் எச்சரிக்கையாகவே நாம் கொள்ள வேண்டும்.





“காற்றுள்ள போதே தூற்றிக் கொள்“ என்று கூறும் போது சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள் என்று பொருள் கொள்ளலாம். காற்றுள்ள போதே தூற்ற வேண்டும். அதே போன்று சந்தர்ப்பம் வாய்க்கும் போது அதை நழுவவிடாது பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சந்தர்ப்பத்தைத் தவறவிட்டால் மறுபடியும் அதே போன்ற சந்தர்ப்பம் வருமெனக் கூறமுடியாது.

நாம் ஒரு காரியத்தைச் சிறப்பாகச் செய்ய வேண்டுமானால் அது நிறை வேறக்கூடிய நல்ல சூழ்நிலையிலேயே அதை முடித்து விடவேண்டும். அதை விட்டுவிட்டு சூழ்நிலை கெட்ட பின் அதில் ஈடுபட்டால் பயன்கிட்டாது. இந்த உண்மையினை இப் பழமொழி நமக்கு உணர்த்துகிறது. காற்றுள்ள போதே தூற்றிக் கொள்வது போல், சந்தரப்பம் வரும் போது அதனைப் பயன்படுத்திக் கொள்ள நாம் முற்படுவோமாக. அதே வேளையில் சந்தர்ப்பம் வாய்க்கிறது எனக் கருதி அடுத்தவரை அதட்டி, மிரட்டி அவர்தம் பொருளை கொள்ளையிட நாம் முயலக்கூடாது. வாய்ப்புக் கிடைக்கும் போது நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து நன்மையைப் பெருக்கி தீமையை விலக்கி நலம்காண முற்படுதலே சீரிய பண்பாகும்.

## 39 பாத்திரம் அறிந்து பிச்சையிடு

ஏதிலிகள், துறவிகள், ஞானிகள், பரிதாபத்திற்குரியவர்கள், அங்கவீனர்கள் போன்றவர்களுக்கே நாம் பிச்சையிட வேண்டும். அவர்கள் மீது கருணை காட்ட வேண்டும். இந்த உண்மையினைப் புலப்படுத்தும் வகையில் உருவான இப் பழமொழி பிச்சையிடுமுன் பிச்சை கேட்போனின் பாத்திரம் குறித்து நன்கறிந்து செயற்பட வேண்டும் என்று நமக்கு ஆலோசனை கூறுகிறது.

'பாத்திரம் அறிந்து பிச்சையிடு' என்றதும் நம்மவர் சிலர் பிச்சை கேட்பவன் கையிலிருக்கும் பாத்திரம் சிறியதா? பெரியதா? என்று பார்த்துப் பிச்சையிட வேண்டுமெனப் பொருள் கொண்டு விடுகின்றனர். இது தவறாகும். இங்கு பாத்திரம் என்ற சொல் அவனது தகுதியை, நிலையைக் குறிக்கிறது. பிச்சை கேட்கும் ஆள் எத்தகையவன்? நல்லவனா? கெட்டவனா? வீண் விரயஞ்செய்பவனா? என்று ஆராய்ந்து பார்த்தே பிச்சையிட வேண்டும் என்று இப் பழமொழி நமக்குக் கூறுகிறது. நாம் கொடுக்கும் பொருளை அவன் கெட்ட வழியில் செலவிடுவானாயின் அதனால் ஏற்படும் பாவத்திற்கு அவன் மட்டுமல்ல பொருள் கொடுத்த நாமும் உள்ளாவோம். கெட்டவனுக்கு - போலி ஆசாமிகளுக்குச் கொடுக்கப்பெறும் பொருள் நஷ்டமாவதுடன் அதனால் சமூகத்திற்கும் உலகிற்கும் கேடே விளையும். எனவே தான் பாத்திரமறிந்து - பிச்சை கேட்போனின் தகுதியறிந்து பிச்சையிடு என்று இப் பழமொழி நமக்குப் பாடம் புகட்டுகிறது.

இன்று உலகில் பரிதாபத்திற்குரியவர்கள் மாதிரி வேடமிட்டுப் பலர் உலவுகின்றனர். போலிச்சாமியார்கள் பலர் தோற்றம் பெற்றுள்ளனர். அவர்களை நாம் இனம் கண்டுகொள்ள வேண்டும். இதனை வலியுறுத்தும் வகையிலேயே 'பாத்திரம் அறிந்து பிச்சையிடு' என்ற பழமொழி அமைந்துள்ளது.





## 40 அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு

நம்மவரால் அதிகம் பேசப்படும் பழமொழிகளுள் இதுவும் ஒன்றாகும். எந்தப் பொருளையும் அளவோடு தான் நாம் உண்ண வேண்டும். வாய்க்கு உருசியாக, வயிற்றுக்கு மிக நல்லதாக இருக்குமென்று கருதி அளவுக்கு மிஞ்சிச் சாப்பிடுவோமானால் வயிறு தான் கெட்டுப் போகும். அஜீரணம் ஏற்பட்டு வருந்த நேரிடும். அமிர்தம் மிக உயர்ந்த பொருள். கிடைத்தற்கரிய பொருள். அப்பேர்ப்பட்ட பொருள் ஒருவருக்குக் கிடைத்து, அதை அவர் அளவுக்கு அதிகமாக உண்பாராயின் அவர் உடல் நலம் பாதிக்கப்படும். அது கிடைத்தற்கரிய அமிர்தமாக இருந்தாலும் அளவோடு உண்பதே உடல் நலத்தைப் பேணிக் கொள்ளும் வழியாகும். இந்த உண்மையை வலியுறுத்தும் வகையிலேயே இப் பழமொழி அமைந்துள்ளது.

இப் பழமொழியை மற்றோர் கோணத்திலும் நாம் நோக்கலாம். வாழ்க்கையில் இன்பகரமான சம்பவங்கள் விளையும் போது அளவோடு தான் மகிழ்வை வெளிக்காட்ட வேண்டும். அளவுக்கு அதிகமாகத் தம்மை மறந்து வெளிக்காட்ட முற்பட்டால் அதனால் ஆபத்துக் கூட விளையலாம். அளவுக்கு அதிகமாக மகிழ்ச்சியைக் காட்ட முனைவோர் குறித்துப் பிறர் ஏளனமாகக் கூடப் பேசுவர். எனவே எதற்கும் ஓர் எல்லை இருத்தல் வேண்டும் என்பதை இப் பழமொழி மறைமுகமாகச் சுட்டிக்காட்டுகிறது.

கிடைத்தற்கரிய அமிர்தமாயினும் அளவோடு உண்ண வேண்டும். அளவுக்கு அதிகமாக உண்பது நஞ்சாக அமைந்து விடும் என்ற உண்மையை இப் பழமொழி நமக்கு கற்பிக்கிறது. வாழ்வில் இதனை நாம் நினைவிற் கொண்டு செயற்படுதலே சீரிய நெறியாகும்.

## 41 முள்ளின் மேல் சீலையைப் போட்டால் மெல்ல மெல்லத்தான் எடுக்க வேண்டும்

இந்தப் பழமொழி நமக்கு நல்லதோர் பாடத்தைக் கற்பிக்கிறது. அவசரப்பட்டுக் காரிய மாற்றாது பொறுமையாகச் செயற்படுவதே விவேகமானது எனக் கூறுகிறது. இதனை விளக்குதற்குக் கதை ஒன்றைக் கூறுவர்.

ஒருவன் தனது துணியை நீரில் தோய்த்து உலரவிட முற்பட்டான். துணியை நீரில் நனைத்துப் பிழிந்து விட்டான். அதை உலரப் போடுதற்குத் தகுந்த இடம் தேடினான். எங்கும் சேறும் சகதியுமாக இருந்தது. என்ன செய்வது? என்று யோசித்தான். பக்கத்தில் காணப்பட்ட முட்செடிகளின் மீது விரித்து விட்டான். துணி உலர்ந்ததும் எடுக்கப் போகும் போது தான் பிரச்சினை ஏற்பட்டது.

வெடுக்கெனத் துணியை இழுத்தெடுக்கப் பார்த்தான். அது பல இடங்களில் முள்ளில் சிக்கியிருந்தது. இழுத்தால் கிழிந்து விடுமென உணர்ந்தான். சிறிது நேரம் யோசித்தான். அவசரப்படாமல் மெல்ல மெல்லத்தான் எடுக்க வேண்டும் என்பது அவனுக்குப் புரிந்தது. வெகுநேரமாகியும் பொருட்படுத்தாது மெல்ல மெல்ல அத்துணியை மீட்டெடுத்தான். அப்போது தான் அது கிழியாமல் அவன் கைக்குக் கிடைத்தது.

இந்தப் பழமொழி மூலம் மற்றோர் உண்மையும் புலப்படுத்தப் படுகிறது. பிறரை அறிந்து கொள்ளாமல் தம்பொருளைக் கொடுத்து விட்டால் கவனமாக இருந்து மெல்லமெல்லத்தான் அதனை மீட்டுப்பெற முயல வேண்டும். அவசரப்பட்டு, பொறுமையின்றிக் கொடுத்த பொருளை மீட்க முற்பட்டால் அப்பொருள் நமக்குத் திரும்பிவராமலேயே போகலாம். எனவே கொடுத்த பொருளை அவசரப்படாது மெல்லமெல்ல வாங்குவதே நன்மை பயப்பதாகும். இந்த உண்மையை நாம் நன்கு விளங்கிக் கொண்டால்





எக்கருமத்தையும் நன்கு நிதானித்து மெல்லமெல்லத்தான் செய்ய முனைவோம். அவசரப்பட்டுச் செய்யும் காரியம் புத்தியீனமான பயனையே விளைக்கும். எனவே எச்செயலில் ஈடுபடும் போதும் அவசரப்படுவதை விடுத்துப் பொறுமையோடு செயற்பட வேண்டும். இதனையே இப் பழமொழி நமக்குக் கற்றுத்தருகிறது.

‘மெல்லெனப் பாயும் நீர் கல்லையும் கரைக்கும்’ என்னும் பழமொழியும் இக்கருத்தையே வலியுறுத்துகிறது எனலாம். எனவே எச்செயலிலும் அவசரத்தைக் கைவிட்டு பொறுமையைப் பேணுவோமாக.

## 42 குரங்கின் கைப் பூமாலை போல

பூமாலை அழகானது. காண்போரைக் கவருந்தன்மையது. நறுமணம் வீசுவது. அதற்கு என்றுமே தனி மதிப்புண்டு. அத்தகைய, எல்லோராலும் விரும்பப்படும் பூமாலை ஒன்று குரங்கின் கைக்குக் கிடைத்தது. அதற்கு அதன் அருமை தெரியாது. வாசனையை நுகரும் விருப்பற்றது. அது என்ன செய்யும்?. அந்தப் பூமாலையை தன் விருப்பப்படி பிய்த்து எறிந்தது. அதனுடைய தகுதி அவ்வளவு தான்.

இந்த உவமானத்தை ஏன் கூறினார்கள் என்று நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தகுதி இல்லாதவர் இடத்தில் சேரும் அரிய பொருளுக்கு என்ன நேரிடும்? அதன் அருமை, பெருமை குன்றி அநியாயமாக அழிந்து போகும். ஏனெனில் தகுதியற்றோர் அப்பொருளின் அருமையை, மேன்மையை உணரமாட்டார். கூடிய விரைவில் அதனை இழந்து பின் வருந்துவர். இந்த உண்மையினையே இந்தப் பழமொழி நமக்கு நன்கு புலப்படுத்துகிறது.

குரங்கின் கைப்பட்ட பூமாலை போல, தகுதியற்றோரிடம் சேரும் பொருள் தன்பெருமை இழந்து அழிந்து விடும் என்ற உண்மையை நாம் மனதிற் பதித்திட வேண்டும் என்ற நோக்குடனேயே நம்முன்னோர் இப் பழமொழியைக் கையாண்டனர் எனலாம். இப் பழமொழியைக் கற்ற பின்னராவது தகுதியறிந்து செயற்படத் தகுதியற்றோர் தம்மை மாற்றிக் கொள்வார்கள் என நம்பலாம் அல்லவா!





## 43 யதார்த்தவாதி வெகுசன விரோதி

பொய்யும், பித்தலாட்டமும் மலிந்துள்ள சமுதாயத்தில் உண்மை, நேர்மைக்கு இடமிருக்காது. மனச்சாட்சிப்படி நடப்பவனுக்கு விரோதிகளே அதிகமாவர். இன்றைய உலகில் இதனை நாம் கண்கூடாகக் காணலாம்.

அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் பாமரர்கள் மத்தியில் வாழும் ஒருவன் - யதார்த்தவாதி, தான் பிறரிடத்தில் காணப்படும் குற்றங்களை அவ்வப்போது சுட்டிக் காட்டிக் கண்டிக்கவே செய்வான். அவனது மனச்சாட்சிக்கு விரோதமான செயலெனக் காணப்படுவனவற்றைக் கண்டிக்கவே செய்வான். இது யாதார்த்த வாதியின் இயல்பெனலாம்.

ஆனால், அவனது கண்டனங்களை அவனோடு உடன் வாழும் துட்டரும், அயோக்கியரும் விரும்ப மாட்டார்கள். அவனைத் தம் விரோதியாகவே எண்ணுவார்கள். அவனிடத்துப் பகைகொள்ளு வார்கள். அவனை இகழ்ந்து பேச முற்படுவர். அவனுக்குப் பல இடையூறுகளை விளைப்பர்.

யதார்த்தவாதி நேர்மையாளனாக, நல்லவனாக இருந்தும் பிறருக்கு அவன் விரோதியாகவே தோற்றுகின்றான். இதனையே இந்தப் பழமொழி நமக்கு எடுத்துக் கூறுகிறது. யதார்த்தவாதி எப்போதும் வெகுசன விரோதியாக வாழ வேண்டிய இக்கட்டான சூழ்நிலை சில வேளைகளில் ஏற்படுகிறது. ஆனால் அறிவாளிகள், நேர்மை மிக்கோர் மத்தியில் யதார்த்தவாதிக்கு என்றும் மதிப்புண்டு. உண்மையே வெல்லும் என்னும் பொன் மொழிக்கு ஒப்ப, யதார்த்தவாதியின் இலட்சியங்கள் எக்காலமும் மதிப்புப் பெறும். உலகியல் நோக்கிலும் ஆன்மீக நோக்கிலும் யதார்த்தவாதிக்குச் சிறப்பிடம் உண்டென்பதை அறிஞர்கள் ஒப்புக்கொள்வர்.

யதார்த்தவாதியாக விளங்கியமையாற்றான் ஆண்டவர் கிறித்துவைச் சிலுவையில் அறைந்து கொன்றனர். தத்துவஞானி

சோக்கிரட்டீசுக்கு விஷத்தைக் கொடுத்துக் கொன்றனர். அண்ணல் காந்தி, மார்ட்டின் லூதர் கிங் போன்றவர்களைச் சுட்டுக் கொன்றனர் அவர்களது பெருமையை உணராதோரின் அநாகரிகச் செயல்களே இவையெனலாம். ஆனால் அவர்களது புகழ் அழிந்த விட்டதா? இல்லவே இல்லை. என்றும் வளர்ந்து கொண்டே செல்கிறது.

எனவேதான் யதார்த்தவாதி வெகுசனங்கள் மத்தியில் விரோதியாகக் கருதப்பட்டாலும் உண்மை, நேர்மை உள்ள அறிஞர்கள் மத்தியில் எக்காலமும் மதிப்புப் பெறுவர் என்பதில் ஐயமில்லை. எனவே யதார்த்தவாதியை வெகுசன விரோதியாகக் கருதுவது குறித்து ஆச்சரியப்பட எதுவுமில்லை.
(யதார்த்தவாதி என்பதை எதார்த்தவாதி என்றும் அழைக்கலாம்.)





## 44 ஆனைக்கும் அடிசறுக்கும்

ஆனை மிகப்பெரிய மிருகம். அதற்கு உறுதியான கால்கள் உண்டு. வேகமாக நடக்கும் சக்தியுண்டு. மிக்க பலம் வாய்ந்த யானைக்கும் சில வேளைகளில் அடி சறுக்குவதுண்டு என்றகருத்தைப் இப் பழமொழி கூறுகிறது. இதன் மூலம் மறைமுகமாக மற்றோர் பொருளையும் இப் பழமொழி நமக்கு உணர்த்துகிறது. அறிவிற் சிறந்த மேதைகள் கூடச் சந்தர்ப்பவசத்தால் சிலவேளைகளில் தவறு விட்டுவிடுகின்றனர். ஒழுக்க சீலர்களும் நிலை தடுமாறித் தவறிழைத்து விடுகின்றனர். அசந்தர்ப்பமாக எப்போதோ ஒன்று நிகழ்ந்து விடுகிறது. அதற்காகக் குறை காண்பது முறையல்ல என்ற கருத்தையும் இப் பழமொழி கொண்டுள்ளது எனலாம்.

இதன் மூலம் சிறு தவறுகளை வைத்துக் கொண்டு பெரியவர்களை நாம் மட்டிடக் கூடாது. தவறு விடுவது மனிதருக்கு இயல்பு. எனவே ஒருவரிடத்தில் உள்ள குறைகளை மட்டும் பெரிது படுத்திக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. குற்றம் களைந்து குணம் கொள்வதே சிறந்த பண்பாகும் என்ற கருத்தை இது புலப்படுத்துகிறது.

யானை மிக்க பலம் பொருந்தியது. அதன் பலத்தை மனிதன் தனக்குச் சாதகமாகப் பல வழிகளிலும் பயன்படுத்திக் கொள்கிறான். அது அடிசறுக்கிவிட்டது என்பதற்காக அதன் பயன்களை மறந்துவிடக் கூடாது.

பெரியவர்கள், சான்றோர்கள் சமூகத்துக்குப் பல வழிகளில் உதவுகிறார்கள். நல்ல செயல்களைச் செய்கிறார்கள். அவர்களையும் மீறிச் சந்தர்ப்பவசத்தால் சில தவறுகளைச் செய்து விட்டார்கள் என்பதற்காக அவர்கள் விட்ட தவறுகளைப் பெருப்பித்து பிரசாரம் செய்வது நன்றல்ல.

ஒருவனிடம் நல்ல பண்புகள் - குணங்கள் மேலோங்கி இருந்தால் அவற்றை நாம் பாராட்ட வேண்டும். அவனிடமுள்ள சிறு குறையை

மட்டும் பெரிதுபடுத்திப் பேசுவது முறையன்று. நன்மையும் தீமையும் கலந்ததே மனித வாழ்க்கை. நல்லனவற்றைப் பாராட்ட நாம் பழகிக் கொள்ள வேண்டும். தவறுகளைத் திருத்திக் கொள்ள முயல வேண்டும். எந்த மனிதனும் நூற்றுக்கு நூறு வீதம் நல்லவனாக இருப்பதில்லை. எனவே நல்லனவற்றை, நன்மைபயக்குவனவற்றைப் பாராட்டவும் தீயனவற்றை மறந்துவிடவும் நாம் பழகிக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கைக்குத் தேவையானவற்றைக் கற்றுக் கொள்ளவும் தேவையற்றவற்றைப் புறந்தள்ளவும் நாம் பழகிக் கொள்வோமாயின் தேவையற்ற பிரச்சினைகளிலிருந்து விடுபட முடியும். "ஆனைக்கும் அடிசறுக்கும்" என்ற பழமொழி சான்றோர்களும் சந்தர்ப்பவசத்தால் தவறுவிடக் கூடும். அவற்றைப் பெரிது படுத்தாதீர் என்ற அறிவுரையை நமக்குத் தருகிறது. அதனை நாமும் வாழ்வில் கடைப்பிடித்து ஒழுகுவோமாயின் நன்மையே விளையும்.





## 45 சேற்றில் புதைந்த யானையைக் காக்கையும் கொத்தும்

யானை மிருகங்களுள் பெரியது. பலம் வாய்ந்தது. பெறுமதி மிக்கது. அது தற்செயலாகச் சேற்றில் புதைந்து வீழ்ந்து விட்டது. எழும்ப முடியவில்லை. அந்நிலையில் அதன் நிலை பரிதாபகரமாகிவிட்டது. அவ்வேளையில் அதற்கு உதவ எவருமே முன்வரவில்லை. பாவம்! யானை சேற்றில் கிடந்து வருந்தியது.

இவ்வேளையில் சின்னஞ் சிறிய காக்கை ஒன்று அதன்மேல் அமர்ந்து கொத்தியது. முன்னர் யானையைக் கிட்ட நெருங்கவே அஞ்சும் காக்கை இப்பொழுது அது தன்னிலை கெட்டு விழுந்து கிடக்கும் போது பெருமையுடன் அதன் முதுகில் அமர்ந்து தன் பெருமையைக் காட்டுகிறது.

இந்தப் பழமொழியின் பொருள் தான் என்ன? எவ்வளவு பெரிய மனிதரானாலும், எவ்வளவு உயர்ந்த பதவியில் இருப்போரானாலும் தமது நிலையினின்றும் தாழ்ந்துவிட்டால் அவர்களை எவருமே மதிக்கமாட்டார்கள். அவர்களுக்குத் தாழ்ந்த நிலையில், இழிந்த நிலையில் இருப்போர் கூடச் சந்தர்ப்பம் அறிந்து ஏளனம் செய்ய முற்படுவர்.

மிகப்பெரிய மிருகமான யானை வீழ்ந்து விட்ட நிலையில் அற்ப பறவையான காகம் கூடத் துணிந்து அதனைக் கொத்துவது போன்று மிக உயர்ந்த நிலையில் இருந்தோர் தாழ்வுறும் போது அற்பர்கள் கூட அவர்களைப் பழிக்க முற்படுவர் என்ற கருத்தையே இப் பழமொழி நமக்குத் கற்றுத் தருகிறது.

"தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.-" என்ற வள்ளுவர் வாக்கும் இதனையே நமக்கு நினைவூட்டுகிறது.

## 46 ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்

நாம் அடிக்கடி கேட்கும் பழமொழிகளில் இதுவுமொன்று. இதன் பொருள்தான் என்ன? நாம் அடுத்தவர்களின் - ஊரார் பிள்ளைகளுக்கு நல்ல உணவளித்து, அன்பு காட்டி, நன்மை செய்துவந்தால் நமது பிள்ளைகளுக்கு இறைவன் துணை நின்று நல்ல முறையில் வளர்ப்பான் என்பதே இதன் பொருளாகும். " பிறர் பிள்ளை தலை தடவ தன்பிள்ளை தானே வளரும்" என்ற முதுமொழியும் இக்கருத்தையே சுட்டுகின்றது. ஆனால் இக்காலத்தவர்கள் இப் பழமொழிக்குப் புதிய அர்த்தம் கூறுகின்றனர்.

தன்வீட்டுக்கு வந்த இன்னோர் வீட்டுப்பெண்ணான மருமகளை (ஊரார் வீட்டுப்பிள்ளை) நல்லமுறையில் மதிப்பளித்து, உணவளித்து அன்போடு ஆதரித்து வந்தால் அவள் வயிற்றில் வளரும் நம் வீட்டுப்பிள்ளை (நம்வீட்டு வாரிசு) நல்லமுறையில் வளரும் என்பதே இப் பழமொழி கூறும் உண்மையான கருத்தாகும் என்று இக்காலத்தவர் கூறுகின்றனர்.

இதன் அர்த்தங்கள் எதுவாக இருந்தாலும் தன்பிள்ளை, ஊரார் பிள்ளை எனப் பேதம் பாராட்டாது அனைத்துப் பிள்ளைகளிடமும் அன்பு காட்டுதலே சிறந்த பண்பாகும்.

இன்றைய சூழ்நிலையில் இது மிக மிக அவசியமாகும். ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன்பிள்ளை தானே வளரும் என்ற நோக்குடன் செயற்படுவதே உகந்ததாகும்.





## 47 கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்

இன்று பெண்ணியவாதிகளால் பெரிதும் ஏளனம் செய்யப்படும் பழமொழிகளுள் இதுவுமொன்று. ஆண் ஆதிக்கவாதிகளின் கோட்பாடு இதுவெனக் கூறுவர் பெண்ணிலைவாதிகள். நமது பண்டைய சமுதாயம் ஆண்களுக்கு முக்கியத்துவம் வழங்கிய ஒருகால கட்டத்தில் உருவானதே இப் பழமொழி.

கணவனாகப்பட்டவன், கல்போல் இரக்கம் இல்லாதவனாக இருந்தாலும், புல்போல் அற்பமானவனாக இருந்தாலும் அவனுக்கு மரியாதை தரவேண்டும் என்பதே இப் பழமொழியின் பொருளாகும் என்பர் முன்னோர்.

ஆனால், இக்காலத்தவர் சிலர் இப் பழமொழிக்குப் புதிய அர்த்தம் கற்பிக்கின்றனர். கணவன் கல்லுமல்ல, புல்லுமல்ல. அவன் ஆண்மகன் தான். அவன் கல்லானாலும் (கல்லான் + ஆனாலும்) அதாவது படிக்காதவன் ஆனாலும், புல்லானாலும் (புல்லான் + ஆனாலும்), தழுவி (புல்லுதல் = தழுவுதல்) அன்பு பாராட்டாது இருந்தாலும் மனைவி வெறுப்புக் கொள்ளாது கணவனுக்கு உரிய அந்தஸ்தை - மரியாதையை வழங்க வேண்டும். இதுவே இப் பழமொழி நமக்குக் கற்றுத்தரும் புதிய கருத்து என்கின்றனர் இக்காலத்தவர்.

எப்படிப் பொருள் கொண்டாலும் மனைவி கணவனுக்கு உரிய அந்தஸ்தைக் கொடுக்க வேண்டும் என்பதையே இப் பழமொழி வலியுறுத்துகிறது.

கணவன், மனைவியின் கருத்துக்கு மதிப்பளித்து அவளைத் தழுவி - அன்பு பாராட்டினால் மனைவியும் கணவனுக்கு உரிய அந்தஸ்தை வழங்குவாள். பரஸ்பரம் இந்த உறவு இல்லாமையாலேயே இக்காலத்தில் குடும்பங்களில் பிரச்சினைகள் தலைதூக்குகின்றன என்பதையும் நாம் மனதிற் கொள்ள வேண்டும்.

## 48 எறும்பு தின்றால் கண் தெரியும்

எறும்புகள் மிகச்சிறிய - அற்ப பிராணிகள். அவை வாசனை யாற்றான் இனத்தையும் உணவையும் இனங்கண்டு வாழுகின்றன. முயற்சியுடையனவாய், தமக்குத் தேவையான உணவு வகைகளைத் தேடிக் கொள்கின்றன.

புற்றில் வாழுகின்ற இந்தச் சிறிய எறும்புகளுக்கும் நமக்கும் என்ன தொடர்பு? எறும்பு தின்றால் கண்தெரியும் என்று ஏன் கூறுகிறார்கள்?

சாதாரணமாக நமது இல்லங்களில் நாம் பருகும் தேநீர், கோப்பி, பால் போன்ற பானங்களிலே எறும்பு கிடந்தால் அதுபற்றிக் குழந்தைகள் பெற்றோரிடம் முறையிடுவதை அறிவோம். அப்படிமுறையிட்டால் பரவாயில்லை ; குடி, எறும்பு தின்றால் கண் தெரியும் என்று சிலர் வேடிக்கையாகவோ, சோம்பேறித்தனமாகவோ கூறுவதைக் கேட்டிருப்பீர்கள். அப்படி ஏன் கூறுகிறார்கள்? இதை விளக்குவதற்கு ஒரு பழைய பாடலும் கதையும் நமக்கு உதவுகிறது.

ஓர் ஊரில் மிகவும் வறுமைப்பட்ட பிச்சைக்காரன் ஒருவன் இருந்தான். அந்த ஊரில் அவனால் திருப்தியாக வாழ முடியவில்லை என்றாலும் இறைவனை வேண்டியபடி தன் வாழ்நாளைக் கடத்தி வந்தான். அவனது அயலில் வாழ்ந்த ஒருவர் வெளியூர் சென்று சில காலம் கழித்து ஊர் திரும்பினார். முன்பு வறுமையில் வாடிய பிச்சைக்காரன் பணக்காரனாக மாறியிருப்பது கண்டு அதிசயித்தார். எப்படி இவனுக்கு இவ்வளவு செல்வம் வந்தது என்று வியப்படைந்தார். அவனிடமே கேட்டும் விட்டார். அதற்கு அப்புதுப் பணக்காரன் பாடல் ஒன்றின் மூலம் பதில் கூறினான்.

"கட்டத்துணியற்று காந்த பசிக்கு அன்னமற்று
எட்டி மரம் ஒத்திருந்த யான்
எறும்புக்கு நொய்யரிசி இட்டேன் - அதனால்
சிறிது பொருள் ஈந்தான் சிவன்





அப்பொருள் கொண்டு அடியவர்க்கு அன்னமிட்டேன்
ஒப்புவமை இல்லான் உள முவந்தே இப்பார்
அளகேசன் என்றே அதிக செல்வம்
அளவிலாது ஈந்தான் அவன்."

இதுவே அவன் கூறிய பாடலாகும். எறும்புகள் உண்பதற்கு உணவிட்டமையால் ஈசன் இரங்கிச் செய்த உதவி இது என அவன் சுட்டிக் காட்டினான். இக்கதையின் மூலம் சிறிய எறும்புகளுக்கு உணவு அளிப்பது உயர்ந்த புண்ணியம் என்பது புலனாகிறது. அதே வேளையில் எறும்புகள் உண்பதற்கு உணவிட்டால் நமக்குக் கண்பார்வை தெரியும் என்பதற்காகவே நம்முன்னோர் இப்பழமொழியை உருவாக்கினர் என்றே கூற வேண்டும்.

இதன் மூலம் உயிர்களுக்கு உணவளித்தால் இறைவன் நமக்கு வேண்டியன யாவும் தருவான் என்ற கருத்தும் புலனாகிறது.

## 49 சட்டியில் இருந்தாற்றான் அகப்பையில் வரும்

நாம் உண்ணும் உணவுப் பொருளானது சட்டியில் இருந்தாற்றான் அகப்பையினால் எடுத்துச் சாப்பிட முடியும். வெறும் சட்டியை வைத்துக் கொண்டு அகப்பையினால் உணவு பரிமாற முடியாது. இப்பழமொழிக்குப் பல்வேறு அர்த்தங்கள் கூறப்படுகின்றன.

ஒருவனிடம் பொருள் இருந்தாற்றான் அவனால் பிறருக்கு அதை வழங்க முடியும். கையில் பொருள் இல்லாதவன் பிறருக்கு வழங்க எதுவுமே அற்றவன் என்பது இந்தப் பழமொழியின் மூலம் புலப்படுத்தப்படுகிறது. இதற்கு மற்றோர் பொருளும் கூறப்படுகிறது.

ஒருவனிடம் கல்வியறிவாகிய செல்வம் இருந்தாற்றான் அவன் வியக்கத்தக்கவகையில் அறிவுரைகளைப் பிறருக்கு வழங்க முடியும். அறிவுச் செல்வம் அற்றவன் பிறருக்கு அறிவுரை பகர இயலாதவனாவான். இதனையே சட்டியில் இருந்தாற்றானே அகப்பையில் வரும் என்னும் பழமொழி புலப்படுத்துகிறது.

ஆன்மீக ரீதியில் இப் பழமொழிக்கு மற்றோர் கருத்தும் கூறப்படுகிறது. குழந்தைப் பேறு இல்லாதவர்கள் சஷ்டி தினத்தன்று இறைவனிடம் குழந்தை வரம் வேண்டி விரதம் இருப்பார்களானால் அவர்களது கருப்பையில் (அதாவது அகப்பையில்) குழந்தை (கர்ப்பம்) உண்டாகும் என்பதே இதன் பொருளாகும் என்பர். சஷ்டி விரதம் அனுட்டிப்பதனால் குழந்தைப் பேறு கிட்டும் என்ற நம்பிக்கை நீண்ட காலமாக நம்மவரிடையே நிலவி வருவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

இப் பழமொழியைப் "பானையில் இருந்தால்தான் அகப்பையில் வரும் " என்றும் கூறுவர்.



## 50 பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க!

திருமண வைபவங்களிலும் வேறு மங்கல நிகழ்வுகளின் போதும் "பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க" என வாழ்த்துவதைக் கண்டிருக்கிறோம். அவ்வாறு வாழ்த்தும் போது பாதினாறு குழந்தைச் செல்வங்களைப் பெற்று மகிழ்ச்சிகரமாக வாழுங்கள் என்கிற கருத்திலேயே சொல்கிறார்கள் எனப் பலரும் கருதுகின்றனர். இது தவறாகும். உண்மையில் இப் பழமொழியின் பொருள்தான் என்ன?

இல்வாழ்க்கையில் பெறத்தக்க பேறுகள் பதினாறு வகைப்படும். அவை புகழ், கல்வி, வலிமை, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், இளமை, நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, துணிவு, நோயின்மை, நீண்ட ஆயுள் என்பனவாகும். இந்தப் பதினாறு பேறுகளையும் பெற்று வாழ்க என வாழ்த்துவதாகவே இப் பழமொழிக்கு பொருள் காணவேண்டும்.

மனித வாழ்வு மகிழ்ச்சிகரமாக அமைய இந்தப் பதினாறு பேறுகளும் தேவையென நம் முன்னோர் கருதினர். அதனாலேயே புதுமணத் தம்பதிகளை வாழ்த்தும் போது பதினாறு பேறும் பெற்று பெருவாழ்வு வாழ்கென நம் முன்னோர் வாழ்த்தினர். அதனையே இன்றும் பின்பற்றி வருகின்றோம்.

வாழ்க்கைக்கு என்னென்ன தேவை என்பதை இப் பழமொழி நமக்கு நினைவூட்டுகிறது. வாழ்க்கையில் இவை அனைத்தும் ஒருங்கே கிட்டும் போதுதான் வாழ்க்கை இன்பகரமானதாக, சிறப்பாக அமைந்துள்ளது எனலாம். இல்லற வாழ்வில் இணைந்த பின்னரே வாழ்வில் பல்வேறு பிரச்சினைகள் எழுகின்றன. அவற்றைச் சமாளிப்பதற்கு என்னென்ன தேவை என்பதையும் இந்தப் பழமொழி சுட்டிக் காட்டுகிறது.

மனித வாழ்வு பயனுடையதாக, மகிழ்ச்சிகரமானதாக அமைய வேண்டுமாயின் பொருளும் தேவை, மனத்துணிவும் தேவை.

"போதும் மென்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்பார்கள். மனத்திருப்தி இருந்தால் மனித வாழ்வு மகிழ்ச்சிகரமாக அமையும். பொருளும், அருளும், மனத்திருப்தியும் பொதிந்திருந்தால் வாழ்வு ஒளிமயமானதாக விளங்கும்.

"பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க!" என்று வாழ்த்தும் போது பதினாறு குழந்தைகளைப் பெற்று வாழ்க எனக் கருதாது, பதினாறு வகைச் செல்வங்களையும் பெற்று வாழ்க என வாழ்த்துவோரும் வாழ்த்தப்படுவோரும் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். அப்போதுதான் இவ்வாழ்த்து பயனுடையதாக அமையும்.

பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க! என நாமும் வாழ்த்துவோமாக!



*பின்னிணைப்பு*

## பழமொழிகள்

1. அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.
2. அக்கரை மாட்டுக்கு இக்கரை பச்சை.
3. அச்சமில்லாதவன் அம்பலம் ஏறுவான்.
4. அச்சாணி இல்லாததேர் முச்சாணும் ஓடாது.
5. அஞ்சினவன் கண்ணுக்கு ஆகாயமெல்லாம் பேய்.
6. அடம்பன் கொடியும் திரண்டால் மிடுக்கு.
7. அடாது செய்தவன் படாது படுவான்.
8. அடிசெய்கிறது அண்ணன் தம்பி செய்யார்.
9. அடிநாக்கில் நஞ்சும் நுனிநாக்கில் அமிர்தமும்.
10. அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்.
11. அடியாத மாடு படியாது.
12. அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது.
13. அப்பன் அருமை மாண்டால் தெரியும்.
14. அப்பியாச வித்தைக்கு அழிவில்லை.
15. அரசன் அன்று கொல்வான் தெய்வம் நின்று கொல்லும்.
16. அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி.
17. அரிசி ஆழாக்கானாலும் அடுப்புக்கட்டி மூன்று வேண்டும்.
18. அருமையற்ற வீட்டில் எருமையும் குடியிருக்காது.
19. அரைக்காசுக்குக் கழிந்த கற்பு ஆயிரம் பொன் கொடுத்தாலும் வராது.
20. அரைக்காசுக்குக் குதிரையும் வேண்டும் ஆறுகடக்கப் பாயவும் வேண்டும்.
21. அலை எப்போது ஓழியும், தலை எப்போது முழுகுவது?
22. அல்லல் ஒரு காலம் செல்வம் ஒரு காலம்.
23. அவசரக்காரனுக்குப் புத்தி மட்டு.
24. அவப்பொழுதிலும் தவப்பொழுது நல்லது.
25. அவள்பேர் கூந்தலழகி அவள் தலை மொட்டை.
26. அழகிருந்தென்ன அதிட்டம் இருக்க வேண்டும்
   அழச் சொல்வார் தமர்; சிரிக்கச் சொல்வார் பிறர்

27. அழிந்த கொல்லையில் குதிரை மேய்ந்தாலென்ன கழுதை மேய்ந்தாலென்ன.
28. அழுதும் பிள்ளையை அவளே பெற வேண்டும்.
29. அழகேசன் ஆனாலும் அளவறிந்து செலவு செய்ய வேண்டும்.
30. அளக்கிற நாழி அகவிலையறியுமா?
31. அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு.
32. அறப் படித்தவன் அங்காடி போனால் விற்கவும் மாட்டான் கொள்ளவும் மாட்டான்.
33. அறிந்தறிந்து செய்யும் பாவத்தை அழுதழுது தொலைக்க வேண்டும்.
34. அறுபத்து நாலடிக் கம்பத்திலேறி ஆடினாலும் அடியிலிறங்கித்தான் காசு வாங்க வேண்டும்.
35. அறையில் ஆடியல்லவோ அம்பலத்தில் ஆடவேண்டும்.
36. அற்ப ஆசை கோடி தவத்தைக் கெடுக்கும்.
37. அற்பனுக்குப் பவுசு வந்தால் அர்த்தராத்திரியில் குடை பிடிப்பான்.
38. அவனன்றி ஓரணுவும் அசையாது.
39. அழுதபிள்ளை பால் குடிக்கும்.
40. ஆகுங்காய் பிஞ்சிலே தெரியும்.
41. ஆசை இருக்கிறது அரசன் ஆக; அதிட்டம் இருக்கிறது கழுதை மேய்க்க.
42. ஆசை வெட்கம் அறியாது.
43. ஆடத் தெரியாதவள் கூடம் கோணல் என்றாளாம்.
44. ஆடிக் கறக்கிற மாட்டை ஆடிக் கறக்க வேண்டும்.
பாடிக் கறக்கிற மாட்டைக் பாடிக் கறக்க வேண்டும்
45. ஆடிக்காற்றிலே அம்மி பறக்கும்போது இலவம் பஞ்சுக்கு எங்கே கதி.
46. ஆடு கொழுக்கிறது இடையனுக்கு லாபம்.
47. ஆரால் கேடு வாயால் கேடு.
48. ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாய் இருக்க வேண்டும்.
49. ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப் பூச் சர்க்கரை.
50. ஆழமறியாமல் காலை விடாதே.
51. ஆறிலும் சாவு நூறிலும் சாவு.
52. ஆறின கஞ்சி பழங்கஞ்சி.
53. ஆறுகடக்கிறவரை அண்ணன் தம்பி.
54. ஆறு போவதே போக்கு அரசன் சொல்வதே தீர்ப்பு.
55. ஆனைக்கு ஒரு காலம் பூனைக்கு ஒரு காலம்.
56. ஆனைக்கும் அடி சறுக்கும்.
57. ஆனைவரும் பின்னே மணிஓசைவரும் முன்னே
58. இஞ்சி லாபம் மஞ்சளிலே
59. இடுகிறவள் தன்னவளானால் அடிப்பந்தியிலிருந்தாலென்ன கடைப்பந்தியிலிருந்தாலென்ன.
60. இமைக்குற்றம் கண்ணுக்குத் தெரியாது.
61. இட்டுக் கெட்டார் எங்கும் இல்லை.
62. இரக்கப் போனாலும் சிறக்கப் போகவேண்டும்.
63. இரவற் சீலையை நம்பி இடுப்பிற் கந்தையை எறியாதே.
64. இராச மகள் ஆனாலும் கொண்டவனுக்குப் பெண்டுதான்.
65. இருந்தால் மூதேவி நடந்தால் சீதேவி.
66. இல்லாது பிறவாது அள்ளாது குறையாது.



67. இழவுக்கு வந்தவள் தாலியறுப்பாளா?
68. இறுகினால் களி இளகினால் கூழ்.
69. இக்கரைக்கு அக்கரை பச்சை.
70. இறைக்கின்ற கிணறு ஊறும்.
71. இளங்கன்று பயமறியாது.
72. இரக்கப் போனாலும் சிறக்கப் போ.
73. இளமையில் கல்வி சிலையில் எழுத்து.
74. ஈட்டி எட்டிய மட்டும் பாயும் பணம் பாதாளம் மட்டும் பாயும்.
75. உடும்பு போனால் போகிறது கைவந்தால் போதும்.
76. உண்டு கொழுத்தால் நண்டு வளையில் இராது.
77. உப்பிட்டவரை உள்ளளவும் நினை.
78. உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமோ?
79. உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா?
80. உருட்டும் புரட்டும் ஒடுக்கும் சிறப்பை.
81. உழுகிற மாடானால் உள்ளூரில் விலையாகாதா?
82. உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்வதா?
83. உலக்கை தேய்ந்து உளிப்பிடியானது.
84. ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்.
85. ஊர்வாயை மூட உலை மூடியில்லை.
86. எண்ணெய் முந்துமோ திரி முந்துமோ?
87. எதிர்த்தவன் ஏழையென்றால் கோபம் சண்டாளன்.
88. எரிகிறது விளக்கானாலும் தூண்டுகோல் ஒன்று வேண்டும்.
89. எளியாரை வலியார்கேட்டால் வலியாரைத் தெய்வம் கேட்கும்.
90. எறும்பு ஊரக் கல்லும் தேயும்.
91. எய்தவன் இருக்க அம்பை நோவானேன்?
92. எட்டி பழுத்தென்ன? ஈயாதார் வாழ்ந்தென்ன?
93. ஏருழுகிறவன் இளப்பமானால் எருது மச்சான்முறை கொண்டாடும்.
94. ஏறச்சொன்னால் எருதுக்குக் கோபம், இறங்கச் சொன்னால் நொண்டிக்குக் கோபம்.
95. ஐயர் வருகின்றவரையில் அமாவாசை நிற்குமா?
96. ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?
97. ஐந்து காசுக்குப் போன மானம் ஆயிரம் கொடுத்தாலும் வராது.
98. ஓதிய மரம் தூணாமோ ஓட்டாங்கிளிஞ்சில் காசாமோ?
99. ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி பிரை.
100. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்.
101. கங்கையில் மூழ்கினாலும் காக்கை அன்னமாகுமோ?
102. கடல் மீனுக்கு நீச்சல் பழக்க வேண்டுமா?
103. கடவுளை நம்பினார் கைவிடப்படார்.
104. கடனில்லாத கஞ்சி கால்வயிறு போதும்.
105. கடன் வாங்கியும் பட்டினி கல்யாணம் பண்ணியும் சந்நியாசி.
106. கடப்பாரையை விழுங்கிவிட்டுச் சுக்குநீர் குடித்தால் தீருமோ?
107. கண்கெட்ட பின்னர் சூரிய வணக்கம்.

108. கரும்பு ருசி என்று வேரோடு பிடுங்கலாமோ?
109. கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும்.
110. கழுதை கெட்டால் குட்டிச் சுவர்.
111. கனவிலே கண்ட பணம் செலவிற்கு உதவுமா?
112. கண்ணாடி நிழலில் கண்ட பணம் கடனுக்கு உதவாது.
113. கடுகு சிறுத்தாலும் காரம் போகாது.
114. காப்புச் சொல்லும் கை மெலிவை.
115. காமாலைக் கண்ணுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள்.
116. காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்.
117. காக்கைக்கும் தன்குஞ்சு பொன் குஞ்சு.
118. கீரைக்கடைக்கும் எதிர்க்கடை வேண்டும்.
119. குயவனுக்கு ஆறுமாதம் தடியடிகாரனுக்கு அரை நாழி.
120. குந்தித்தின்றால் குன்றும் மாளும்.
121. குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்.
122. கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்?
123. குரைக்கிற நாய் கடியாது.
124. குடிக்கிறது கூழ், கொப்பளிக்கிறது பன்னீர்.
125. குப்பையில் கிடந்தாலும் குன்றிமணி நிறம் மாறாது.
126. கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளையில் தெரியும்.
127. கொல்லன் தெருவில் ஊசி விலைபோகுமா?
128. கோழி மிதித்து குஞ்சு முடமாகுமா?
129. கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா?
130. கொடுத்ததைக் கேட்டால் அடுத்தது பகை.
131. சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் மட்டும்.
132. சிறு துரும்பும் பல் குத்த உதவும்.
133. சிறிய பாம்பானாலும் பெரியதடி கொண்டடி.
134. சுட்டசட்டி அறியுமோ அப்பத்தின் சுவையை.
135. சுவர் இருந்தாலன்றோ சித்திரம் எழுதலாம்.
136. சுண்டைக்காய் கால் பணம், சுமை கூலி முக்கால்பணம்.
137. சூடுகண்ட பூனை அடுப்பங்கரை சேராது.
138. செருப்புக்காகக் காலைத் தறிப்பதா?
139. சேற்றில் புதைந்த யானையைக் காக்கையும் கொத்தும்.
140. தங்கையின் பிள்ளை தன் பிள்ளையானால் - தவத்துக்குப் போவானேன்.
141. தம்பியுடையான் சண்டைக் கஞ்சான்.
142. தன்வீட்டு விளக்கென்று முத்தமிடலாமா?
143. தாயைப் போலப் பிள்ளை நூலைப் போலச் சேலை.
144. தாலியறுத்தவளுக்கு மருத்துவிச்சி தயவு ஏன்?
145. தாய் முகம் காணாத பிள்ளையும் மழைமுகம் காணாத பயிரும்.
146. திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை.
147. துணை போனாலும் பிணை போகாதே.
148. தென்றல் முற்றிப் பெருங் காற்றாகும்.
149. தேள் நெருப்பில் விழுந்தால் எடுத்துவிட்டவனுக்கே கொட்டும்.



150. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்.
151. நரிக்கு இடம் கொடுத்தால் கிடைக்கு இரண்டு ஆடு கேட்கும்.
152. நாய் விற்ற காசு குரைக்குமா?
153. நித்தம் போனால் முத்தம் சலிக்கும்.
154. நீர் உள்ள மட்டும் மீன்குஞ்சு துள்ளும்.
155. நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு.
156. நாமொன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்.
157. பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்.
158. பழகப் பழகப் பாலும் புளிக்கும்.
159. பணம் இல்லாதவன் பிணம்.
160. பலதுளி பெருவெள்ளம்.
161. பதறாத காரியம் சிதறாது.
162. பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாது.
163. பார்த்தால் பசு பாய்ந்தால் புலி.
164. பானையில் உண்டானால் அகப்பையில் வரும்.
165. புலி பதுங்குவது பாய்ச்சலுக்கு அடையாளம்.
166. பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லு.
167. பெண் என்றால் பேயும் இரங்கும்.
168. பொன்னின் குடத்திற்குப் பொட்டிட வேண்டுமா?
169. போதும் என்ற மனமே பொன்செய்யும் மருந்து.
170. மகன் செத்தாலும் சாகட்டும் மருமகள் கொட்டம் அடங்கினாற் போதும்.
171. மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி.
172. மனம் போல மாங்கல்யம்.
173. மருந்தேயானாலும் விருந்தோடு உண்.
174. மாமியார் உடைத்தால் மண்கலம்: மருமகள் உடைத்தால் பொன்கலம்.
175. முள்ளின் மேல் சீலை போட்டால் மெள்ள மெள்ள வாங்க வேண்டும்.
176. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
177. மூத்தோர் சொன்ன வார்த்தை அமிர்தம்.
178. மின்னுவதெல்லாம் பொன்னல்ல.
179. முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்.
180. மேழி பிடித்தவன் என்ன செய்வான் பானை பிடித்தவள் பாக்கியம்.
181. யதார்த்தவாதி வெகுசன விரோதி.
182. யானை அசைந்து தின்னும், வீடு அசையாமல் தின்னும்.
183. யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே.
184. யானை படுத்தால் குதிரை மட்டம்.
185. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்.
186. வாய் உள்ள பிள்ளை பிழைக்கும்.
187. வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை.
188. வெறும் கை முழம் போடுமா?
189. வேண்டாற் பெண்டில் கைபட்டால் குற்றம் கால் பட்டால் குற்றம்.
190. வேலைக்கள்ளிக்கு பிள்ளைப் பராக்கு.

